# முழுதும் அழகிய குமரன்



ACC.No. 25548

டாக்டர் சேக்கிழார்தாசன்

வலையப்பேட்டை ரா. கிருஷ்ணன்

T.N. Ulaganathan

அன்பளிப்பு:
தஞ்சாவூர்
நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T

1315
4571

உ

எழுதரிய அறுமுகமும்
அணிநுதலும் வயிரம் இடை
யிட்டுச் சமைந்த செஞ்சுட்டிக்
கலன்களும் துங்க நீள்பன்—
னிரு கருணை விழிமலரும்
இலகுபதி னிரு குழையும்
ரத்னக் குதம்பையும் பத்மக்
கரங்களும் செம்பொன் நூலும்;
மொழிபுகழும் உடை மணியும்
அரைவடமும் அடியிணையும்
முத்தச் சதங்கையும் சித்ரச்
சிகண்டியும் செங்கை வேலும்—
**முழுதும் அழகிய குமர**
கிரிகுமரி யுடன் உருகும்
முக்கட் சிவன் பெறும்
சத்புத்ர உம்பர்தம் தம்பிரானே.

—'விழையுமணி'—திருப்புகழ்.

# முழுதும் அழகிய குமரன்



ஆக்கியோர்

'சேக்கிழார்தாசன்' பேராசிரியர்
டாக்டர் R. ராமசேஷன், M.A., M.Ed., Ph.D.,
வலையப்பேட்டை ரா. கிருஷ்ணன், B.Com.,

T. N. Ulaganathan

அன்பளிப்பு:
தஞ்சாவூர்
நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T

திருப்புகழ் பதிப்பகம்
35, முருகப்ப முதலித்தெரு, திருவல்லிக்கேணி,
சென்னை 600005.


25548

முதற்பதிப்பு : டிசம்பர் 1987

© வலையப்பேட்டை ரா. கிருஷ்ணன்

விலை : ரூ. 18-00

இந்நூலாசிரியர்கள் எழுதிய "அருணகிரிநாதர் அடிச்சுவட்டில்—திருப்புகழ் தலப்பயணம்" என்னும் நூல் சுவாமிமலை ஸ்ரீ சுவாமிநாதசுவாமி திருக்கோயிலில் கிடைக்கும். விலை : ரூ. 25-00

இந்நூலைப்பற்றி அன்பர்களது கருத்துக்களையும் ஆலோசனைகளையும் வரவேற்கிறோம்.

ஜீவன் பிரஸ், சென்னை-600 005.

உ

முருகா

# திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் வழங்கிய

# அணிந்துரை

மூவர் தேவாதிகள் தம்பிரானாகிய முருகப்பெருமான் கருணையே வடிவானவர். வேதத்தில் முருகப்பெருமானைப் பற்றி விதந்து கூறப்பட்டுள்ளது. கந்தவேள் பிரணவப் பொருளாக விளங்கி மும்மை நலன்களையும் அருள் புரிகின்றார். பல பிறவிகளில் செய்த புண்ணியம் இருந்தால் தான் முருகனை வழிபடுகின்ற வாய்ப்பு உண்டாகும்.

முருகப்பெருமானுடைய திருவுருவங்களின் விவரங்களை நன்கு ஆராய்ந்து என் அன்பர் சேக்கிழார் தாசன் ஆர். ராமசேஷன் அவர்களும், அவர் சகோதரர் வலையப் பேட்டை ரா. கிருஷ்ணன் அவர்களும் இந்நூலை எழுதி தமிழுலகுக்கு உதவியுள்ளார்கள். குமார தந்திரம் முதலிய பல நூல்களில் இருந்து அரிய பெரிய கருத்துக்களை நுணுகி ஆய்ந்து இந்நூல் வரையப்பட்டுள்ளது. முருகப்பெருமானை வழிபடுவோர்க்கு இந்நூல் அதிகம் பயன் பெறும்.

முருகவேளின் திருவுருவ பேதங்களின் படங்களை அச்சிட்டுத் தெளிவாக விளக்கம் செய்துள்ளார்கள்.

"முழுதும் அழகிய குமரன்" என்று இந்த நூலுக்குப் பேரிட்டது மிகமிக அழகாக அமைந்துள்ளது. 'எழுதரிய இளங்குமரன் முழுதும் அழகிய முருகனாக விளங்குகிறான். அருணகிரிநாதருடைய கருத்துக்கள் இந்நூலில் ஒளி செய் கின்றன. அருணகிரிநாதர் முருகவேளை கனவிலும் நனவிலும் தெரிசித்தமாக முனிவர்.

இந்த நூல் அறுமுகன் அடியவர்க்கு சமய சஞ்சீவியாக உதவும். இதனை ஏனோரும் ஓதி உய்வு பெறுவார்களாக.

முருகன் கருணையது துணைபுரிக.

அன்பன்,

கிருபானந்தவாரி

உ

முருகா சரணம்

# முன்னுரை

ஒரு நாட்டில் வாழும் மக்களின் பண்பிற்கு ஏற்பவே அவர்கள் வணங்கும் தெய்வத்தின் இயல்புகளும் அமைகின்றன. காணவும் கருதவும் இயலாத கடவுளைப் பற்றிச் சிந்தித்து உணர்ந்து இன்ன தன்மையன் என்று அறியவொண்ணு இயல்பினனாகிய இறைவனை அவன் இன்னின்ன தன்மைகள் உடையவன் என ஆராய்ந்து அறிந்து அனுபவித்துக் கருத்து விளக்கம் செய்துள்ள இந்திய ஞானிகளின் சிறப்பு மனிதனின் செயற்கரும் செயல்களுள் எல்லாம் தலைசிறந்த செயலாகும்.

"அணிமுகங்கள் ஓர் ஆறும் ஈராறு கையும்
இணையின்றித் தானுடையான் (—சிலப்பதிகாரம்)

என்று பிறசமயத்தவரும் போற்றும் முருகன் திருவுருவங்கள் பற்றிய ஓர் அறிமுகமாக இந்நூலைச் செந்தமிழ்க் கந்தன் திருவடிகளில் என் சகோதரரும் நானும் படைக்கிறோம். இந்நூலில் முருகன் தொன்மை, முருகன் தத்துவம், முருகன் வடிவங்கள், கந்தனின் கவின்மிகு கோலங்கள், முருகவழிபாடு, நமது பணிகள் என்று ஆறு பகுதிகளில் பல செய்திகளை எடுத்து மக்கள் முன் வைத்துள்ளோம். அரியபல நிழற்படங்களை ஆங்காங்கே காட்டி நூலின் மாண்பினை மிகுவிக்க முயற்சி செய்துள்ளோம்.

அருணகிரிநாதர் திருப்புகழில் போற்றிய தலங்களின் பெருமைகளை உணர்ந்து அத்தலங்களுக்குச் சென்று வழி பட்டு இன்புறும் வகையில் என் சகோதரரும் நானும் எழுதிய "அருணகிரிநாதர் அடிச்சுவட்டில்-திருப்புகழ்தலப் பயணம்" என்ற நூல் 1981-இல் சுவாமிமலை ஸ்ரீசுவாமி நாத சுவாமி திருக்கோயில் வாயிலாக வெளிவந்தது. இந் நூலை அச்சிட்டு திருப்புகழ் தலங்களின் பெருமைகளை உலகறியச் செய்ய உதவியவர் அப்பொழுது, இந்து சமய அறநிலையத்துறை ஆணையராக இருந்த திரு. U. சுப்ர மண்யன், I. A. S., என்னும் பெருந்தகையாளர். அன்னாரது ஆர்வத்தினாலும் ஊக்கத்தினாலும் வெளிவந்த அந்நூல் அனைவரது பாராட்டுதல்களையும் பெற்று எங்களுக்கும் பெருமை தேடித்தந்தது. முருகனடியார்களின் திருப்புகழ் தலவழிபாட்டிற்கு அந்நூல் பெருந்துணையாக இன்றும் இருந்து வருகிறது.

என் சகோதரர் 'சேக்கிழார் தாசன்' அவர்கள் 1985-ஆம் ஆண்டில் சென்னை பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற "அருணகிரிநாதர் நூல்களில் காணப்பெறும் சிற்ப வடிவங்கள்" என்ரு தலைப்பில் ஆய்வு செய்து இந்த ஆண்டின் (1987) தொடக்கத்தில் டாக்டர் பட்டம் பெற்றார். அவர் தம் ஆய்வு ஏட்டினைத் தயாரிக்கும் போதே முருகன் வடிவங்கள் பற்றி ஒரு சிறந்த நூலைத் தமிழில் உருவாக்கத் திட்டமிட்டு அதற்கான பிரதியொன்றைத் தயாரித்தார். இந்த ஆண்டு எங்களுக்குக் கிடைத்த முருகனது சில அரிய வடிவங்களின் புகைப்படங்களைக் கொண்டு நூலை மேலும் செம்மையாக்கி அதனை அச்சிடும் முயற்சியை மேற்கொண்டோம். இந்த நூலின் அச்சிட்ட முதல் பதினாறு பக்கங்களை அண்ணா சேக்கிழார்தாசன் அவர்கள் முருகன் திருவடிகளைச் சேர்வதற்கு முதல்நாள் (செப்டம்பர் 15) மருத்துவமனையில் பார்த்து மகிழ்ந்தார். ஆனால் "முழுதும் அழகிய குமரன்" நூலை முழுதுமாக அச்சிட்டுக் காணும் வாய்ப்பு அவருக்குக் கிடைக்காமலே

போய்விட்டது. அவரை இழந்த நிலையில் என்ன செய்யலாம் என்று நான் குழம்பி, யோசித்து தெளிவடைந்தபோது, இந்நூலை விரைவில் அச்சிட்டு அவருக்கே காணிக்கையாக்கி வெளியிடத் தீர்மானித்தேன். இதனைக் கடிதம் மூலம் பல நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் தெரிவித்தேன். இந்த ஏற்பாட்டை அனைவரும் வரவேற்று அண்ணா டாக்டர் ராமசேஷன் அவர்களது பணி. பாரெல்லாம் பலருக்கும் தெரிய வேண்டும் என்ற உயர்ந்த எண்ணத்தில் நூல் வெளியிடுவதற்கான செலவிற்கு முன்பணம் அனுப்பி உதவி எனக்கு மிகவும் ஊக்கத்தையும் ஆக்கத்தையும் அளித்தார்கள். அவர்களது பேருதவிகளினால்தான் இந்நூல் சிறப்பாக அமைந்துள்ளது என்று சொன்னால் மிகையாகாது. அந்த நல்ல உள்ளங்களுக்கெல்லாம் எனது மனமார்ந்த நன்றியையும், வணக்கங்களையும் தெரிவிப்பதோடு முருகன் திருவருளால் அவர்களெல்லாம் எல்லா நலன்களும் பெற்று இன்பமாக வாழப் பிரார்த்திக்கிறேன்.

இந்நூல் அச்சாகுங்கால் மிக்க அன்புடனும், ஆர்வமுடனும் பல விதங்களில் உதவிய சகோதரர்கள் திரு P. கிருஷ்ணமூர்த்தி (இயக்குனர், ஸ்ரீமதி சிட் பண்ட்ஸ் (பி) லிமிடெட்), திரு S. மோகனரங்கம் (கார்போரண்டம் யுனிவர்சல் லிமிடெட்) ஆகியோருக்கு நான் மிகவும் கடமைப் பட்டுள்ளேன். இந்நூலில் காணும் அரிய வடிவங்களின் படங்களைக் கொடுத்துதவிய 'தமிழகக் கோயிற்கலைச் செல்வர்' திரு தி. ராசமாணிக்கம், 'தமிழக அற்புத ஆலயங்கள்' நூலாசிரியர் திரு V. நாராயணசுவாமி, 'திருவிடைக்கழி திருத்தொண்டர்' டாக்டர் திரு ஆ. மங்கலமுடையார், 'கந்தரநுபூதிச் செல்வர்' குகத்திரு குகதாசன், பாண்டிச்சேரி பிரெஞ்சு இந்திய இயல் நிறுவனம் மற்றும் சென்னை அரசு அருங்காட்சியகம் ஆகிய அனைவருக்கும், முகப்பு அட்டை படம் தயாரித்து உதவிய 'ஓவியர் திலகம்' திரு K. வேத கணபதி (வேதா) மற்றும், திரு ப. ராதா கிருஷ்ணன் ஆகியோருக்கும் என்து நன்றியையும் அன்பையும்

தெரிவித்துக் கொள்கிறேன். பிளாக்குகளை தயாரிப்பதை கவனிக்கவும், அச்சக வேலைகளை உடனிருந்து பார்வையிட்டும் உதவிய எனது மருமான் சிரஞ்சீவி குமாருக்கும் (நாராயணன்) எனது வாழ்த்துக்களும், நன்றியும் உரித்தாகும். பிளாக்குகளை நல்ல முறையில் தயாரித்து அளித்த ராயன் கம்பெனியாருக்கும், அழகான முறையில் அச்சிட்ட திருவல்லிக்கேணி ஜீவன் அச்சகத்தாருக்கும் என் மனமார்ந்த நன்றி.

இந்நூலைப்பற்றி அன்பர்களது கருத்துக்களையும் ஆலோசனைகளையும் பெரிதும் வரவேற்கிறேன். அண்ணா சேக்கிழார் தாசன் அவர்கள் எழுதியுள்ள ஒப்பற்ற நூல்கள் இன்னும் பல அச்சாக வேண்டியுள்ளது. அவைகளில் "மகேச்வர வடிவங்கள்" என்ற நூல் 1983 லேயே எங்களால் தயாரிக்கப் பெற்றது. சதாசிவ மூர்த்தத்தின் ஐந்து முகங்களில் தோன்றிய இருபத்தைந்து வடிவங்களைப் பற்றிய ஆகம, சிற்ப, இலக்கியச் சான்றுகளுடன் 50க்கும் மேற்பட்ட அரிய படங்களுடன் அந்த நூல் உருவாகி யுள்ளது. அன்பர்களது ஆதரவும், அன்பும் இருப்பின் அதனை வெளியிடுவது என்பது மிகவும் எளிமையான செயல். இந்நூலை அச்சிட ஊக்குவித்த நண்பர்கள், உறவினர்கள் அனைவரும் "மகேச்வர வடிவங்கள்" நூலை அச்சிடவும் ஆதரவு தருவார்கள் என்று என்று பூரணமாக நம்புகிறேன்.

அண்ணா டாக்டர் சேக்கிழார்தாசன் அவர்கள் ஆத்மா சாந்தியடைய பிரார்த்திக்கிறேன். அவர்கள் வானிலிருந்து ஆசிகூறி வாழ்த்தட்டும். அன்பர்கள் அனைவரும் வள்ளி குஞ்சரி மணாளன் வான்கருணையால் வளம்பல பெற்று இன்பமாக வாழ வேண்டுகிறேன்.

முருகா சரணம்

திருவல்லிக்கேணி
14-12-87

**வலையப்பேட்டை ரா. கிருஷ்ணன்**

உள்ளே............



அமரர் 'சேக்கிழார் தாசன்'
டாக்டர் R. ராமசேஷன். M.A , M.Ed., Ph.D.,

உ



T. N. Olaganathan.,

# 1. முருகன் தொன்மை

**தாமரை புரையும் காமர் சேவடி**
**பவளத் தன்ன மேனித் திகழொளிக்**
**குன்றி யேய்க்கும் உடுக்கைக் குன்றின்**
**நெஞ்சுபக எறிந்த அம்சுடர் நெடுவேல்**
**சேவலங் கொடியோன் காப்ப**
**ஏமவைகல் எய்தின்றால் உலகே.**

*—குறுந்தொகை : கடவுள் வாழ்த்து*
*பாரதம் பாடிய பெருந்தேவனார் இயற்றியது*

அழியா அழகினை முருகு என்று அழைத்தனர் நம் முன்னோர். "இயற்கை மணமும், மாறா இளமையும், கடவுள் தன்மையும், அழியா அழகும், எல்லாப் பொருளையும் கடந்தொளிரும் தன்மையும்'[1] இறைவனின் இயல்புகளாகும். இவ்வியல்புகள் அமைந்த ஒன்றைத் தமிழ்மக்கள் முருகன் என்று கண்டு வணங்கி வருகிறார்கள். முருகை உடையவனே முருகன். அழகின் உடல் இயற்கை. இயற்கை அன்னையின் அழகே அழியா அழகு. அதுவே முருகு என்னும் பேரழகு ஆகும். இவ்வழகே பழந்தமிழர் போற்றிய கைபுனைந்தியற்றாக் கவின்பெரு வனப்பாம் முருகன்.

தமிழ்த் தந்தை திரு. வி. க. கூறுவது போன்று, "அழகு இல்லையேல் வாழ்வு ஏது? ஒருவனது வாழ்வு அவனது அழகையே பொறுத்து நிற்கிறது. உலகிலுள்ள உயிர்கள் எல்லாம் உடல் நலமுற்று

இன்பம் துய்த்து வாழ்தல் வேண்டும் என்னும் பேரருளால் முருகன் இயற்கை வாயிலாக அழகை உதவுகிறன். திங்களாக அமுதம் பொழிந்து உலகுக்கு இன்பம் ஊட்டுகிறன். மலையாக நின்றும், ஆருக ஓடியும், காடாக விளங்கியும், கடலாக ஒலித்தும், உடலாக உடனிருந்தும் உயிர்களைப் பேணி வருகிறன் முருகன்.'' 1

இயற்கை வாயிலாக முருகன் புரிந்துவரும் பேருதவியை மக்கள் நேரே பெறுவார்களாயின் அவர்கள் என்றும் அழியா அழகுடையவர்களா யிருப்பர் என்று திரு.வி.க. கூறுவார். என்றும் இளமையுடையவராக வாழ விரும்புவோர் முருகனை எப்பொழுதும் நினைந்த வண்ணம் இருப்பர். குமரனை மனமொழி மெய்களால் தொழுவோர் என்றும் குமரரு யிருப்பது இயல்பே. பண்டைத் தமிழ்நாட்டார் இயற்கையோடு முரண்படாத வாழ்வு நடத்தி இயற்கை அழகாம் முருகனை வழிபட்டமையால் அவர்கள் இளமை இன்பம் நுகர்ந்து வந்தனர்.

பழந்தமிழர் தாம் தொழுத கடவுளை அழகுப் பொருளாகவே கொண்டனர். சிவனைச் சொக்கன் (அழகன்) எனப் போற்றினர். ''அழகனே! ஆலவாயில் அப்பனே அருள் செய்வாயே'' என்பது அப்பர் அமுத வாக்கு. ''அலவலமை தவிர்த்த அழகன்'' என்பது பெரியாழ்வார் பைந்தமிழ்.

மக்கள் வாழ்வு முதல் முதலில் தொடங்கிய இடம் மலை என்பது அறிஞர் கருத்து. பழந்தமிழ் மக்கள் மலையிடை வாழ்ந்தபோது தங்கள் கடவுளை மலைநிலைக்

1. முருகன் அல்லது அழகு ; திரு.வி.க. பக். 19, 20.

கடவுளாகக் கொண்டனர். மலைமீது வாழ்ந்தபோது காலையிலும் மாலையிலும் ஞாயிற்றின் செம்மையும் வானத்திற்படரும் செம்மையும் பிற செம்மைகளும் அவர்தம் உள்ளத்தைக் கவர்ந்தன. அச்செவ்விய இயற்கை அழகை அவர்கள் "சேய்" என்று போற்றினர். தமது கண்ணுக்குப் பச்சைப்பசேலெனக் காட்சி வழங்கிய காட்டின் இயற்கை அழகை "மால்" என்று அவர்கள் வாழ்த்தினர். அவர்கள் மருத நிலத்தில் குடிபுகுந்தபோது, இறைமை என்னும் இயற்கை அழகைக் கண்டு அதை "வேந்து" எனக் கொண்டனர். அவர்கள் கடற்கரை நண்ணியபோது கடலின் இயற்கை அழகை "வண்ணம்" என்றனர். இவ்வாறு பழந்தமிழ் மக்கள் அவ்வந்நில இயற்கை அழகுக்கு இட்ட பெயர்கள் "சேய், மால், வேந்து, வண்ணம்" என்பனவாகும்.

இயற்கையை உடலாகக் கொண்ட உயிராக முருகன் திகழ்கிறான். முருகு என்ற சொல்லில் மூன்று உகரங்கள் உள்ளன. அகர உகர மகரம் என வரும மூன்றில், அகரம்: படைத்தல் (சிருஷ்டி), உகரம்: காத்தல் (ஸ்திதி), மகரம்: அழித்தல் (சம்காரம்) என்பவற்றைக் குறிக்கும். ஆகவே உகரம் உயிர்களைக் காக்கிறது. உயிர்களுக்கு மூன்று சுகங்கள் வேண்டும். அவை முறையே இகம், பரம், வீடுபேறு என்பன. மூன்று நலன்களையும் மூன்று உகரங்கள் அளிக்கும் பெற்றியை முருகு என்னும் சொல்லில் காண்கிறோம்.

சங்க நூல்களில் முருகனின் தொன்மையைக் காண்கிறோம். தொல்காப்பியத்தில் முருக வழிபாடு குறிப்பிடப் பெறுகிறது. சேயோனின் செவ்விய வழிபாடு அன்று முதல் இன்றுவரை தொடர்ந்து

வளர்ந்து வந்துள்ளது. ஒவ்வொரு காலத்தும் முருகன் அடியார்கள் அவதரித்து முருக வழிபாட்டை முறைப் படுத்தி மக்களுக்கு வழிகாட்டி வந்துள்ளனர். பல்வேறு நூல்களில் முருகன் தொன்மையும் வழிபாடும் விளக்கப்பட்டுள்ளன.

## 2. முருகன் தத்துவம்

வடமொழியில் 'ஸ்வாமி' என்ற சொல் முருகனுக்கே உரியது ஆகும்.

**தேவ ஸேனாபதி: சூர: ஸ்வாமீ கஜமுகாநுஜ:**
**ஸேனானீ: அக்னிபூ: குஹ:**

என்று பேசுகிறது வடமொழி நிகண்டாகிய அமர கோசம். தேவ (தேவயானை நாயகன்) சேனைத் தலைவன், சூரன், சுவாமி, யானைமுகன் தம்பி, சேனாபதி, அக்னி குமாரன், குகன் என்று பட்டியலிட்டு முருகன் பெயரை அழகுபடக் கூறுகிறது. அகில உலகத்தையும் தன் உடைமையாக (ஸ்வம்) கொண்டிருப்பவனே சுவாமி.

இவ்வுலகுக்கு எந்நாளும் அருள் புரிவதற்காக வெளிப்பட்ட ஒரு மின்னல் சக்தியே முருகன். "ஸ்கந்த" என்ற வடமொழிச் சொல்லுக்கு "வெளிப் படுதல்" என்று பொருள். மேகத்திலிருந்து மின்னல் வெளிப்படுவது போன்று சிவஜோதியிலிருந்து வெளிப் பட்ட ஆறு பொறிகள் ஆறுமுக சுவாமியாகி ஸ்கந்தன் எனப் பெயர் கொண்டது. ஆகவே சிவசக்தி ஜோதியில் ஜனித்த பேரொளிப் பிழம்பாக முருகன்

திகழ்கிருன். அவன் பரம பராக்கிரமசாலி; பேரருட் சக்தி வடிவினன். ஞான பலமும் முருகனுக்கே அதிகம் என்று காட்டவே சிவபெருமானும் முருகவேளிடம் உபதேசம் பெற்றுக் கொண்டார்.

தீப்பொறியாகத் தோன்றி, வானிலிருந்து வாயுவால் சுமந்து வரப் பெற்று கங்கையில் விடப் பெற்று, சரவணப் பொய்கையில் வளர்ந்த முருகன் தீ, வான், வாயு, நீர், பூமி என்னும் ஐம்பூதத் தொடர் புடையவனுகத் திகழ்கிருன். நெருப்பையும் எரிக்கும் ஞானுக்கினியாக முருகன் விளங்குகிருன்.

தந்தை நெருப்பு; தாய் நீர் (கங்கை); மகனே ஜோதி வடிவினன்.

முருகன் ஆறுமுகன். மனிதன் ஆறறிவு உடையவன். ஆருவது அறிவே இறையுணர்வு என்னும் அன்புநெறி விளக்கத்துக்கு நிலைக்களனுய் இருப்பது. இறையுணர்வுதான் மக்களையும் மாக்களை வேறுபடுத்திக் காட்டவல்லது. ஆறறிவுடைய மக்களால் வழிபடப் பெறும் ஆறுமுகனின் தத்துவமோ பலவாருகப் பெருகி விளங்குகிறது. காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாத்சரியம் என்னும் ஆறு பகைவர்களையும் கொன்று ஞானம் அருள்பவன் ஆறுமுகன்.

தந்தை: ஸ்தாணு (மரம்); தாய்: அபர்ணு (கொடி); மகனே விசாகன் (கீழ்க்கன்று) என்ற நயமும் முருகன் தத்துவத்தில் காணப்படுகிறது.

தெய்வத்தன்மை, இனிமை, இளமை, மணம், மகிழ்ச்சி, அழகு என்னும் ஆறு தன்மைகளையுடையவன் ஆறுமுகனும் முருகன்.

அந்திக்கு நிகர்மெய் யண்ணல்
அருள் புரிந்து அறிஞராயோர்
சிந்திக்கும் தனது தொல்லைத்
திருமுகம் ஆறும் கொண்டான்.

—கந்தபுராணம்

காணுபத்தியம், கௌமாரம், சைவம், சாக்தம், வைஷ்ணவம், சௌரம் என்னும் ஆறுவகை சமயமாக விளங்குபவன் தான் ஒருவனே எனக் காட்டுவதற்காக அவன் ஆறுமுகம் கொண்டிருக்கிறுன்.

நான்கு திசைகள் மற்றும் மேலுலகம், கீழுலகம் என்னும் ஆறு பக்கங்களும் அவன் கருணை பொலிகின்றதால் அவன் ஆறுமுகன் என்று போற்றப்படுகிறுன்.

“நமசிவாய” என்னும் திருவைந்தெழுத்துடன் பிரணவமும் சேர்ந்து ஆறு திருமுகமாகக் கொண்டு திகழ்கிறுன் முருகன்.

“ஓம் எனப்படும் குடிலையே ஒப்பிலா முருகன்
மா முகத்துள் ஒன்ருகும்”

என்பது கந்தபுராணம்.

ஆறுமுகனுக்கு அற்புத விளக்கமாகப் புலவர் புராணப் பாடல் ஒன்று அமைகின்றது பாருங்கள்.

கண்ணிகர் மெய்யும் சென்னிக்
கணமுறழ் இனத்தின் கூறும்
திண்ணிய தோள்களே போல்
திகழ்தரும் உயிரும் வேறென்று
எண்ணுதற் கரிய தாகும்
எஃகமும் இயலிற் காட்டும்
புண்ணிய முருகன் செய்ய
பொற்பதம் போற்றி வாழ்வாம்.

அதாவது முருகனின் பன்னிரு தோள்கள் தமிழின் பன்னிரண்டு உயிரெழுத்துக்களாகும்; பதினெட்டுக் கண்களும் பதினெட்டு மெய்யெழுத்துக்கள். அவனது ஆறு திருமுகங்களும் இன எழுத்துக்கள் ஆகும். அறிவுச் சுடராக விளங்கும் அவனது வேல் ஆய்த எழுத்தாகும். இவ்வாறாக முருகனே தமிழாகத் திகழ்கிறான்.

தானே ஆறு சமயங்களுக்கும் தனிக் கடவுள் என்பதையே ஆறுமுகன் காட்டுகின்றான்.

ஆறுசமயக் கடவுள் வேறுவே றின்றி
யான்ஒரு வனேஅங் கங்கிருந்து
அன்பர்க்கு முத்திதருவித் தென்று
யாவர்க்கும் அறிவித்த வதன மணியே !

—சிதம்பர சுவாமிகள்

திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் ஆறுமுக விளக்கமாக அற்புதப் பாடல் ஒன்றை அருளியுள்ளார்கள்.

ஆட்டும் சமயம் ஆறினுக்கும்
ஆதாரங்கள் ஆறினுக்கும்
அத்துவா ஓர் ஆறினுக்கும்
அமையும் தானே முதல் என்று

தீட்டும் படியா வரும் தெளியத்
 தெளிந்தாங்(கு) ஆறுமுகம் திகழச்
செல்வம் மலியும் இடைக்கழிவாழ்
 சேயைப் பரிந்து காக்கவே

— திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழ்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் காட்டும் ஆறுமுக விளக்கமும் இங்கே குறிப்பிடத்தக்கது.

குருவும் கணபதியும் கொற்ற மழுவானும்
திருமடந்தை காவலனும் சேணில்—வருசுடரும்
தேவினத்தின் தாயான சிற்சத்தியும் முருகோன்
மூவிரண்டாக் காட்டும் முகம்.

வேறு வேறு பயன் வேண்டுவோர் வேறு வேருக எண்ணி வழிபடுவதற்கு உரியதாக ஆறுமுகமுடன் குமாரக் கடவுள் விளங்குகிருர் என்கிருர் வண்ணச் சரபம்.

பரம் பொருளின் பிரகாசம் பரிதிப்புத்தேள்
 பலவுலகும் ஒடுக்குகின்ற பண்பே ஈசன்
கரந்தவற்றை உதவுவது சத்தி, யாவும்
 காப்பது மால். அடியவர்தாம் கருதும் செய்கைக்கு
உரங்கொடுத்து முடித்திடுதல் கணேசன், ஞான
 உபதேசம் புரிந்திடுதல் ஞானவேற்கையான்
வரம்பெறு மட்டு பாசித்துப் பெற்ருேர் இந்த
 வகையுணர்வார் மற்றையர்க்கு வம்பாம் அன்றே.

—கௌமாரமுறை

ஆறுமுகத்தின் விளக்கமாக “ஐந்து முகத்தோடு அதோ முகமும்” என்ற குமரகுருபர சுவாமிகளின் கந்தர்கலி வெண்பா வரிகள் வருகின்றன. சிவபெருமானுடைய சத்தியோஜாதம், வாமதேவம், அகோரம்,

தத்புருஷம், ஈசானம் என்னும் ஐந்து முகங்களுடன் அதோமுகமும் சேர்ந்து ஆறு முகமானார் குமரவேள். ஐம்புலனும் ஒன்றப்பெறும் சான்றோர்பால் விளங்கும் (சித்சக்தி) ஆருவதறிவுக்குப் பொருளாவது அதோ முகம்.

சிதாகாச வடிவமாகக் காணுமிடத்து வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு, மேல், கீழ் என்னும் ஆறினும் நிறைந்து நிற்கும் பெருமான் அவர்.

சிவபெருமானின் ஐந்து முகத்தோடு சக்தியின் முகமும் சேர்ந்து ஆறுமுகமாயிற்று.

ஆறுமுகத்தின் விளக்கங்களையெல்லாம் விரிவாக ஆறுமுக மூர்த்தி பற்றி பின்னர் கூறும்போது காண்போம்.

வேதம் சிவபிரானைச் "சதாசிவோம்" என்று ஒரு முறைதான் கூறியது. ஆனால் முருகனை "சுப்ரஹ்மண்யோம், சுப்ரஹ்மண்யோம், சுப்ரஹ்மண்யோம்" என மும்முறை போற்றியது. வேத நெறியை (பிரம்மண்யத்தை) வளர்ப்பவன் சுப்பிரமணியன். சுப்பிரமண்யத்தின் மேல் எப்பிரமம் உள்ளது? என வினவுகின்றார் பாம்பன் சுவாமிகள்.

சுவ்வெ னும்மொழி சுத்தஇன் பாகும்ஓர்
அவ்வி யத்தவிண் ணும்பிர மத்தினின்று
எவ்வம் இன்றொளிர் கின்றமின் னே,ணியம்
ஒவ்வும் சீர்சுப்ர மண்யம்என் றோர்தியால்.

(சு - சுகம், ஆனந்தம்; பிரம்மம் - சிவபரம்பொருள்; ண்யம் - தோன்றி ஒளிர்வது.)

சிவபெருமானே முருகன் என்ற விளக்கம் கந்த புராணத்தில் காணப்படுகிறது. சிவபெருமான் உமையம்மையிடம் கூறுவார்:

"ஆதலின் நமது சக்தி அறுமுகன், அவனும்யாமும்
பேதகம் அன்றால், நம்போல் பிரிவிலன் யாண்டும் நின்றான்
ஏதமில் குழவி போல்வான், யாவையும் உணர்ந்தான் சீரும்,,
போதமும், அழிவில் வீடும், போற்றினர்க்கு அருளவல்லான்"

முருகனின் பெயர்களுள் முக்கியமான மூன்று பெயர்களாக அருணகிரிநாதர் கந்தரநுபூதியில் குறிப்பிடும்போது

"முருகன் குமரன் குகன் என்று மொழிந்து
உருகும் செயல்தந்து உணர்வு என்று
அருள்வாய்?"

குமரன் என்ற சொல் மிக உன்னதமானது. குமரன் - இளமையுடையவன். நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் குறிப்பிடும் ஆறெழுத்து "நமகுமாராய" என்று உரையாசிரியர் கூறுவார். குமாரன் என்ற சொல்லுக்கு அஞ்ஞான இருளை அழிப்பவன் என்று பொருள். குமரன் என்றால் இளையோன்;— "என்றும் இளையோய்" என்கிறது சங்கப்பாடல். இளமையே முருகு என்று முன்னரே குறிப்பிட்டோம். திருப்பதியில் பாலாஜி (குமாரன்) என்று அனைவரும் போற்றுவதும், குமார தாரை என்று அங்குள்ள புண்ணியப்புனல் ஒன்றை அழைப்பதும், அங்குள்ள திருக்குளத்தை சுவாமி புஷ்கரணி (சுவாமி—முருகனுக்குரிய பெயர்) எனப் போற்றுவதும் திருவேங்கடத்திறைவனின் முருகன் தொடர்பினைக் காட்டும்.

நாத குமார நம என்று அரனுர்
ஓதாய் என ஓதியதெப் பொருள் தான் ?

என அருணகிரிநாதர் முருகனை அழைக்கும்போது சிவபெருமான் முருகனை அழைத்த 'குமரா' என்ற திருப் பெயரையே குறிப்பிடுகின்ருர்.

குமாரன் என்ற சொல்லுக்குப் பாம்பன் சுவாமிகள் கூறும் விளக்கத்தைப் பார்ப்போம் :

குவ்வெனும் குற்சிதம் மாமலம்
கொன்றருள் செய்பவன் மாரன்
ஒவ்விடும் அர்த்தமதாம், அவை
ஒன்றும் நவிற்சி குமாரன் என்று
உவ்வுளார் நாவில் எழும்பவே
யுள்ளது, சந்ததம் நன்னிலைப்
பவ்வமெனும் குமரா எனப்
பன்னுநர் பாவங்கள் பாறுமே

கு-குற்சிதம், அருவருப்பு, மலம்; மாரன்-மரிக்கச் செய்பவன், அழிப்பவன். உயிர்களின் மலப்பிணிப்பை அழித்தொழிப்பவன் குமாரன் 'நம : குமாராய' என்பது முருகனுக்குரிய சடாக்ஷர மந்திரம்.

குகன் என்ற பெயர் அடுத்து நம் சிந்தனைக்கு வரும்.

''வணங்கும் ஆருயிர்க் குகைதொறும்
வதிதலால் குகன்.........''

என்று தணிகை புராணம் பேசும். இதய குகையில் வைத்துத் தகரவித்தையால் உபாசிக்கப்படுபவன் குகன். ''குகனைத் தவிர இன்ஞெரு தெய்வம் எனக்குத்

தெரியவில்லை; எனக்குத் தெரியவே இல்லை ! (ந ஜானே! ந ஜானே!) என்று பரவுகிறார் ஆதிசங்கரர் தனது சுப்ரமணிய புஜங்க ஸ்தோத்திரத்தில்,

கந்தரநுபூதியை முடிக்கும்போது அருணகிரி நாதரும் "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" என முடித்து மகிழ்கிறார்.

சரவணன் என்ற திருப்பெயர் சிவபிரானையும் திருமாலையும் குறிக்கும் சொல் என்பர். சரவணபவன் என்றால் சரவணத்தில் தோன்றியவன், நாணற் காட்டில் தோன்றியவன் என்பது ஒரு பொருள். ச - மங்கலம்; ர - ஒளி-கொடை; வ - சாத்வீகம்; ந - போர்; பவன் - தோன்றியவன் என்ற விளக்கத்தைப் பெறும்போது பல கருத்துக்கள் வெளிப்படுகின்றன.

ஒளி வடிவினனாக முருகன் திகழ்வதால் ஞாயிறும் முருகனும் நயம்பட ஒப்பிடப் பெறுகிறார்கள். ஞாயிற்றின் தோற்றம் யாவரையும் மகிழ்விக்கும். அது போல முருகன் திருவுருவம் அனைவரையும் மகிழ்வித்து இன்புறச் செய்கிறது. ஞாயிறு உலகுக்கு ஒளி உதவி நலம் செய்யும். முருகனும் பேரொளி வடிவனாகி மன்னுயிர்கட்கெல்லாம் தண்ணருள் சுரக்கிறான். ஞாயிறு அனைவராலும் விரும்பிப் புகழப் படுகிறது. முருகனும் பலராலும் போற்றப்படுகிறான். இக்கருத்தினைக் கொண்டு நோக்குங்கால் திரு முருகாற்றுப்படையை நக்கீரர் தொடங்கும்போது

**"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு**
**பலர்புகழ் ஞாயிறு"**

என்று பாட முனைவதன் நயம் புலப்படுகின்றது!

கந்தன் என்னும் திருப்பெயரும் சிந்தித்து மகிழ்தற்குரியது. யாவருக்கும் பற்றுக்கோடாய்த் திகழ்பவன் கந்தன். கடவுளர் பலரின் ஆற்றலும் கூறும் ஒருங்கே திரண்டவன். அடியார்களுக்குப் பற்றுக்கோடானவன். கந்து - நடுதறி. ஐம்புல வயப்பட்ட ஆன்மாவைக் கட்டும் நடுதறியாகக் கந்தன் விளங்குகிறான். பகைவர் வலிமையை வற்றச் செய்பவன் கந்தன்.

ஆன்மாக்களின் அறியாமையை நீக்கும் குருபரன் அவனே!

முருகனுக்கு அறிவே திருமேனி.

"அறிவும் அறியாமையும் கடந்த
அறிவு திருமேனி என்று உணர்ந்துஉன்
அருண சரணாவிந்தம் என்று அடைவேனோ"

என வேண்டுகிறார் அருணகிரிநாத சுவாமிகள்.

முருகனை ஞானத்தாலேதான் அறிய முடியும். அந்தப் பேரறிவும் அவனாலேயே தரப் பெறுதல் வேண்டும்.

"அறிவால் அறிந்து உன் இருதாள் இறைஞ்சும்
அடியார்"

"அறிவை அறிவால் அறிந்து—நிறைவாகி
அகில புவனாதி யெங்கும் வெளியுற
மெய்ஞ்ஞான இன்ப
அமுதை ஒழியாது அருந்த அருள்வாயே"

என்பது அருணகிரிநாதரின் அருள்வாக்கு.

**ஞானந்தான் உருவாகிய நாயகன் இயல்பை**
**யானும் நீயுமாய் இசைத்தும் என்றால் அஃது எளிதோ**
**மோனம் தீர்கலா முனிவரும் தேற்றிலர், முழுதும்**
**தானும் காண்கிலன் இன்னமும் தன்பெருந் தலைமை.**

என்று அசுரன் வாயிலாக ஆறுமுகன் பெருமையைப் பேசுமாறு செய்கிறார் கந்தபுராண ஆசிரியர். சூரபன்மனுக்கு அவன் தம்பி கூறும் அறிவுரை இது!

முருகனுக்கே தன் பெருமை இத்தகையதென்று இன்னமும் தெரியாது. ஆம்! அவன் தந்தை சிவபெருமானின் நிலையும் அப்படித்தானே!

**"தம் பெருமைத் தான் அறியாத் தன்மையன் காண்**
**சாழலோ"**

என்பது மணிவாசகரது திருவாசகம்.

வாசித்துக் காணொணாதது, பூசித்துக் கூடொணாதது, வாய்விட்டுப் பேசொணாதது, நெஞ்சினாலே மாசற்குத் தோணொணாதது, நேசர்க்குப் பேறொணாதது, மாயைக்குச் சூழொணாதது ஆயினும் அடியவர்க்கு எளியவன் என்பதை வள்ளி தத்துவத்தில் காட்டுகிறான் முருகன்.

யான் எனது அற்ற அடியவரிடம் இறைவன் தானே வந்து தன்னை அளித்து மகிழ்வான் என்பது தான் வள்ளி கலியாண தத்துவமாகும்.

முருகனிடத்தில் மூன்று சக்திகள் உள்ளன. அவை வருமாறு.

1. இச்சாசக்தி (விழைவாற்றல்) வள்ளி—இகம்

2. கிரியா சக்தி (செயலாற்றல்) தேவயானை-பரம்

3. ஞான சக்தி (அறிவாற்றல்) வேல்—வீடு

இச்சா சக்தியின் வடிவமே வள்ளியம்மை. வள்ளியம்மை கரிய நிறம் உடையவர்; முருகனின் வலப்பக்கத்தில் வீற்றிருப்பார்; கையில் தாமரை ஏந்தியிருப்பவர்.

**... ... ... ... ... ... ...ஒருமுகம்**
**குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்**
**மடவரல் வள்ளி யொடு நகையமர்ந்தன்றே**

என்பது திருமுருகாற்றுப்படை. போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல் இறைவன் தன்மை ஆதலின், உலகில் இல்வாழ்க்கை நடத்தற்பொருட்டு முருகன்வள்ளியம்மையாரோடு தன் ஒரு திருமுகத்தாற் பேசி, மகிழ்ந்து நகைமயர்ந்திருக்கின்றான், காம நுகர்ச்சியில்லாத இறைவன் இங்ஙனம் வள்ளியோடு நகையமர்ந்திருத்தல், உலகுயிர்கள் எய்த்தக்க நன்மையின் பொருட்டேயாகும்.

"பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற பேதை கொங்கை விரும்பும் குமரன்" எனக் கந்தரலங்காரம் கூறும். அதனுள் தினைப்புனம் உலகம், தினைச் கொல்லை ஞானப்பயிர் விளையும் இடம்; வள்ளி என்பது பரிபக்குவம் அடைந்த நல்லுயிர்; வள்ளியின் கொங்கைகள் பரஞானம், அபரஞானம் என்பர். குறவர் குலமகள் ஆகிய வள்ளியை முருகன் நயந்து வலிந்து வந்து மணந்து கொண்டது, அடியார்களை அப்பெருமான் பெரிதும் 'வா வா' என்று வலித் தாண்டு கொள்ளும் எளிமைத் தன்மை (சௌலப்யம்) ஆகிய பேரருள் திறத்தினைப் புலப்படுத்துகின்றது.

"குறமகள் அவள் எம் குலமகள் அவளொடும்
அறுமுக ஒருவ நின் அடியினை தொழுதேம்"

என்று சிலப்பதிகாரம் போற்றும். வேடமங்கையாகிய வள்ளி, பக்குவப்பட்ட ஆன்மாவின் வடிவம். யான் எனது என்ற செருக்கற்று இறைவன் திருவடிகளில் சரணடைந்த தன்மை வள்ளியின் தன்மையாகும். இவ்வாறு வள்ளி பின்பற்றிய நெறியினை வள்ளிச் சன்மார்க்கம் என்று போற்றுவார் அருணகிரிநாத சுவாமிகள்.

பிரதி பலனை எதிர்பாராமல் (நிஷ்காமியமாகப்) பணி செய்கின்ற பான்மையை முருகன் மிகமகிழ்ந்து அருள்வான் என்ற வள்ளிதத்துவத்தை நினைப்பூட்டுவதாக அப்பர் சுவாமிகளின் தேவாரப்பாடல் ஒன்று விளங்குகிறது.

நம் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணி செய்து கிடப்பதே.

கடம்பனாகிய முருகனை நினைப்பூட்டி அருளும் திறத்தைக் காட்டி நம்மைப் பணி செய்ய அழைக்கிறார் இங்கே அப்பரடிகள்.

முருகனின் மற்றொரு சக்தி தெய்வயானை. இவ்வுலகிலிருந்து வள்ளியையும் வானுலகிலிருந்து தெய்வயானையையும் ஏற்று, முருகன் எவ்வுலகிலுள்ளோரும் தனக்கு முன்னால் சமமாவர் என்பதைக் காட்டும் சிறப்பினை இங்கு உணரலாம். கிரியாசக்தியின் வடிவமாக விளங்குகிறாள் தெய்வயானை அம்மையை "மறுஇல் கற்பின் வாணுதல் கணவன்" எனறு நக்கீரர் போற்றுவார்.



சிவகுருநாதன்

(உபதேச மூர்த்தி)

திருப்போரூர் ஸ்ரீ கந்தசுவாமி கோயில் (பக்கம்—65)

'படைத்ததற்கும் காத்ததற்கும் உரிமைதோன்ற' என நச்சினார்க்கினியர் விளக்கம் கூறுவார் தெய்வயானையை 'அறக்கற்புடையாள்' என்பார் அவர். செயலாற்றும் திறம் மிக்கவர்கள் புகழ் விரும்பாது பெரிதும் அடக்கமாக இருத்தல் போல முருகனின் கிரியா சக்தியாகிய தெய்வயானை யம்மையின் சிறப்பும் நூல்களிற் சான்றோர்களால் தனியாக எடுத்து மிகுதியாகக் கூறப் பெறவில்லை.

தெய்வயானையம்மையார் செந்நிறம் வாய்ந்தவர்; முருகனின் இடப்பால் விளங்குபவர்; கருங்குவளை மலரைக் கையில் ஏந்தியிருப்பவர்.

முருகனிடம் அமைந்த மூன்றாவது சக்தி ஞானசக்தி. அதுவே வேலாயுதமாக விளங்குகின்றது. வெல்லும் தன்மை உடையது வேல். எல்லாவற்றையும் வெல்வது அறிவாற்றல். அறிவு ஆழமும், அகலமும், கூர்மையும் உடையது. "ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே" என்று இறைவனைப் போற்றுகிறது திருவாசகம். முருக வேளின் வேலாயுதமும் ஆழ்ந்து அகன்று கூர்மை யுடையதாய்த் திகழ்கிறது. "சக்திதன் வடிவே தென்னில் தடையிலா ஞானமாகும்" என்பது சிவஞான சித்தியார் வாக்கு. முருகனின் ஞான வேலுக்குச் சக்தி என்ற பெயரும் உண்டு.

ஞானமே அஞ்ஞானத்தை வெல்லவல்லது, ஆதலின் ஆணவம், கன்மம், மாயை என்னும் மலங் களாகிய சூரபதுமன், சிங்கமுகன், தாருகன் என்னும் அசுரர்களை அழித்தொழித்து 'ஞானமயம்' ஆகிய வேலே யாவருக்கும் நலம்புரிந்தது.

"சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்கை வேல் அன்றே
பார் இருப் பவ்வத்தின் உள்புக்குப் பண்டொருநாள்
சூர்மாத் தடிந்த சுடர்இலைய வெள்வேலே"

என்று இளங்கோவடிகள் போற்றுவார். 'வேலை வணங்குவதே வேலை' எனச் சான்றோர் கூறுவர். முருகனின் வேலை வணங்குதலால் நாம் எல்லா ஞானமும் பெறலாம்.

மிகப் பழங்காலத்திலேயே புகார் நகரத்தில் 'வேற் கோட்டம்' இருந்த செய்தி சிலப்பதிகாரத்தில் 'கனுத்திறம் உரைத்த காதை'யில் கூறப்பெறு கின்றது.

வேல் அருள் உருவம் கொண்டது என்பதை "அங்கியின் வடிவம் நீங்கி அருள் உருக் கொண்டு" என்று கந்தபுராணத்தில் கச்சியப்பர் கூறுவார். திருவருள் சக்தி வடிவான வேல் முருகன் திருக்கரத்தில் ஒளிர்கின்றது. அது தங்கவேல், மாணிக்கவேல், மரகதவேல் குழந்தைவேல், சிங்காரவேல், இரத்தின வேல், வெற்றிவேல், சண்முகவேல், கதிர்வேல், முத்து வேல், அருள்வேல், முருகவேல், சுந்தரவேல், இராஜ வேல், வீரவேல் என்றெல்லாம் போற்றப்படுகிறது. வேல் வகுப்பு, வேல் விருத்தம், வேல் அலங்காரம் முதலிய நூல்கள் வேலின் பெருமையைச் சாற்றுவன. 'மாமயிலோன் வேல்பட்டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும்' என்று கந்தரலங்காரத்தில் அருணகிரியார் பாடுவார். முருகன் வேல்பட்டவுடன் சூரபன்மன் இருகூறு ஆனான். ஆணவ வடிவமான சூரன் முருகனின் வாகனமானான். அவனது ஒரு கூறு

மயிலாகவும் மற்ருெரு கூறு சேவலாகவும் வெளிப் பட்டது. மயில் = ஆணவம்; சேவல் = சிவஞானம், ஆணவத்தை அழிக்க ஞானமாகிய முருகன் மயில் மீது அமர்ந்துள்ளான்.

வேலினை முருகன் யாரிடமிருந்து பெற்ருன்? என்ற விருவுக்கு அருணகிரிநாதர் இரு விடை தருகிருர்.

முருகனுக்கு சிவபெருமானே வேல் தந்தருளினுர்.

**"போமாறினி வேறெதுவோ தென
வேயார் அருளால் அவர் ஈதரு
போர் வேலவ"** திருப்புகழ் 779.

**"சிவன் உகந்தருள் கூர்தரு வேல் விடு முருகோனே"**
— திருப்புகழ் 876.

கந்தபுராணமும் சிவபெருமானே வேல் தந்ததாகக் காட்டுகிறது. முருகனுக்கு அம்பிகை வேல் தந்தருளினுள்.

**"எம்புதல்வா வாழிவாழி எனும்படி
வீருன வேல்தர**
— திருச்செந்தூர் திருப்புகழ்

தேவியே முருகனுக்கு வேல் தந்தருளினுள் என்று கல்லாடமும் பேசுகிறது.

**அழியாப் பேரளி உமைக்கணின்று
தற்பெயர் புணர்த்திக் கற்பினெடு கொடுத்த
அமையா வென்றி அர்த்தநெடு வேலோய்**

"உதயபாநு சதகோடி உருவான ஒளிவாகும்
அயில்வேல்"
— திருப்புகழ் 207.

எனப் போற்றுகிறார் அருணகிரி வள்ளல். அந்நெடுவல் வஞ்சர்க்கு வஞ்சனை செய்யும்; அடியவர்க்கு உதவும். அது ஐந்தொழில் புரியும் என்பதைத் திருப்புகழில் காண்கிறோம்.

கண்ணாடியில் தடம் கண்ட வேல் - தோற்றம் (படைத்தல்)

அடியார்களை (வீரவாகுதேவர், நக்கீரர் முதலியோரைக்) காத்தல்-ஸ்திதி (காத்தல்)

சூரபன்மாதியரை வதைத்தல்—சம்ஹாரம் (அழித்தல்)

அடியாரிடத்து வெம்மையை மறைத்துத் தண்ணளி சுரத்தலும், பகைவரிடத்துத் தண்மையை மறைத்து வெம்மையை அளித்தலும்- திரோபவம் (மறைத்தல்)

அடியார்களுக்கு (அருணகிரிநாதர், குமரகுருபரர் நாவில்) நலம்தந்தருளல்—அநுக்கிரகம் (அருளல்)

வேலின் பெருமையைக் கூறவந்த அருணகிரிநாத சுவாமிகள் அதை மூன்று பொருள்களுக்கு ஒப்புமை கூறுகிறார்.

**i. பஞ்சாக்கரத்துக்கு நிகராகும் – (திருப்புகழ்—606)**

**ii. மறச்சிறுமி (வள்ளி) விழிக்கு நிகராகும் – (வேல்வகுப்பு)**

**iii. இறை கழற்கு நிகராகும் (வேல்வகுப்பு.)**

சிவபெருமானுடைய ஐந்தெழுத்து மந்திரத்துக்கு நிகராக, வள்ளியின் கருணை விழிக்கு நிகராக, இறைவனின் திருவடிகளுக்கு நிகராக வேலினைக் கூறுகிறார்.

"வேலையுறை நீட்டி வேலதனில் ஓட்டு வேலை விளையாட்டு வயலூரா" என்று அருணகிரிநாதர் பாடும் போது வேலுக்கு உறையுண்டு என்ற பேருண்மையும் புலப்படுகின்றது.

முருகவேளுக்குரிய அஸ்திரதேவர் வேலாயுதமே யாகும். வேலாயுதத்தை "உடம்பிடித் தெய்வம்" என்று கந்தபுராணம் போற்றும். "எண்ணரும் படைகட் கெல்லாம் இறைவனாக" விளங்குகிறது வேலாயுதம்.

முருகன் என்றவுடன் அவனது மயிலும் சேவலும் நம் கண்முன் நிற்கின்றன. முருகனுக்கு மூன்று மயில்கள் உண்டு. (1) சூரபதுமனை அழிக்கும் முன்னரே முருகனுக்கு மயில் வாகனம் இருந்தது (2) இந்திரனும் மயிலாக முருகனைத் தாங்கினான் (3) சூரன் அழிந்தபின் அவனது ஒரு பாதி மயிலாகியது. மயில் தன் அழகால் யாவரையும் மயக்க வல்லது. எனவே அதனை மாயை என்பர். கோழி ஊர்த்துவ மாயை. மயில் அதோ மாயை. கோழி நாத தத்துவம் எனில் மயில் விந்து தத்துவம். நாதம் ஒளி வடிவினது. விந்து ஒலி வடிவினது. விந்து தத்துவம் ஆகிய மயில் கண் கவரும் ஒளியுடையதாய்ப் பலவகை நிறங்களைக் கொண்டு திகழ்தல் காணலாம். மயிலைப் பிரணவ மந்திரம் எனக் கொள்ளலாம். தோகையை விரித்து ஆடும் மயிலின் தோற்றம் ஓங்காரம் போல் ஒளிர்தல் பற்றியே "ஓங்காரத்துள்ளே முருகன் உருவங்கண்டு தூங்குதல் வேண்டும்" என்று கந்தரலங்காரம் கூறுகிறது. மயிலின் வடிவம் மந்திர ரூபமாக விளங்குவதை,

"ஆன தனி மந்த்ர ரூபநிலை கொண்டது
ஆடும் மயில் என்ப தறியேனே

என்று அருணகிரியார் திருப்புகழில் உணர்த்துவார்.

பரமனிடம் கனிபெறவேண்டி "நெடிய கடலுலகு நொடியில் வலம் வந்த அதிவேகக் கலபகமயில்" அது. அதன் நடன அழகுக் காட்சியை

"நடன மிடும் இறைவர் மகிழ் கருதரிய விதமொடு
அழகுடன் ஆடும் கலபக சுகமயில்

என்று திருப்புகழ் போற்றும்.

முருகனுக்குக் கொடியாக விளங்குவது கோழி. முருகனை வழிபடுவோர் கோழிக் கொடி நாட்டி, அதனை வாழ்க என்று வாழ்த்தி மகிழ்தல் அக்காலத்தே இருந்த செயல் என்பதனை

"கோழி ஓங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரி(து) என் றேத்தி"

எனவரும் திருமுருகாற்றுப்படை வரிகள் உணர்த்தும். கோழிக்குச் சேவல் என்று பெயர். அது பிறபறவை களுக்கும் பொதுப் பெயராக வழங்கப்படும். சேவலாகிய கோழி ஒளியை விரும்புவது. எனவே அது அறியாமை இருளைப் போக்கி மெய்யறிவாகிய ஒளியைப் பரப்பும் முருகனின் கொடியாக விளங்குவது பொருத்தமே யாகும். வைகறையிற் கோழி கூவுதல், ஓங்கார மந்திரத்தை ஒலி வடிவால் உலகுக்கு உணர்த்துவதாகும். எனவே கோழியை நாத தத்துவம் என்பர். நாத தத்துவம்தான் எல்லாவற்றிற்கும் மூல முதல்

தத்துவம். நாதம் இல்லையேல் ஞானிலமே இல்லை. இச்சிறப்புக் குறித்தே "கோழிக் கொடியன் அடிபணி யாமல் குவலயத்தே வாழக் கருதும் மதியிலிகாள்" என்பார் கந்தரலங்காரத்தில் அருணகிரியார்.

முருகனின் கோழிக் கொடியின் மாண்பினை யாரே விளக்க முடியும்! சேவல், நம் உயிர்க்குக்காவல். "ஆடும் பரிவேல் அணி சேவல் எனப் பாடும் பணியே பணியாய் அருள்வாய்" என்று வேண்டியே தமது கந்தரநுபூதியைத் தொடங்குகிறார் அருணைவள்ளல். முட்பதத்தையும், காலாயுதத்தையும், நாகாயுதத் தையும் கொண்ட சேவல் தனது சிறகு அடித்துக் கொள்ளச் சலதி கிழிந்து உடைபட்டது, அண்ட கடாகம் உதிர்ந்தது, உடுபடலம் குன்றமும் மாமேரு வெற்பும் இடிபட்டன என்கிறார் அருணகிரிநாதர். ஏழு உலகமும் அதிரும்படி ஒலி செய்யும் சேவல் ஏழு உலகமும் வாழ்வதற்குத் துணை புரிகின்றது. சிவஞான வடிவாகவே சேவல் விளங்குகின்றது. முருகன் கோழிக் கொடி ஏந்தி நம்மையெல்லாம் சிவஞானப் பேரொளியில் துய்க்கச் செய்தருளுகின்றார். அருணகிரிநாதர் அருளிச் செய்துள்ள சேவல் விருத்தம், மயில் விருத்தம், மயில் வகுப்பு ஆகியவைகளும் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அருளிய மயில் அலங்காரமும் அருமையான பாராயண நூல்களாகும்.

வேலும் மயிலும் நினைந்தவர் துயர் தீர அருள்கந்த!



# 3. முருகனின் வடிவங்கள்

ஒரு நாமம் ஒருவரும் ஒன்றுமிலார்க்கு ஆயிரம் திருநாமம் பாடிப் பரவுவது வழிபாடு. வழிபாட்டிற்குரிய முதல் அங்கமாகத் திகழ்வது இறைவன் திருவுருவம். இப்படியன் இந்நிறத்தன் என்று எழுதிக் காட்டொணு இறைவனை நம் முன்னேர் எப்படியெல்லாம் கண்டு மகிழ்ந்து வணங்கி நமக்கும் காட்டிச் சென்றுள்ளனர் என்பதை நினைக்கும் போது வியப்பாகவே உள்ளது. இறைவன் தனது பெருங்கருணையால் வேண்டுவார்க்கு வேண்டும் வடிவங்களில் திருக்காட்சி தந்தருளியதோடு அக்கோலங்களில் தன்னை வழிபடுவோர்க்கும் என்றும் அருளைச் சொரிகின்ருன். இதுவே ஹிந்து சமயத்தின் தனிச் சிறப்பும் மாண்பும் ஆகும்.

முருகவேள் கருணையே வடிவானவர். ‘‘ஆருஞ் ஆனந்தத்து அடியார் செய்யும் அனுசாரம் பொறுத் தருளி அவர்மேல் என்றும் சீருத பெருமான்’’ என்று சிவபெருமானைத் திருநாவுக்கரசர் திருத்தாண்டகத்துள் போற்றுவார். சிவகுமாரனும் அப்படித் தானே இருந்தாக வேண்டும்!

‘‘மொழியும் அடியார்கள் கோடி குறை கருதினும்
வேறு முனிய அறியாத தேவர் பெருமானே’’

என்று போற்றுகிருர் அருணகிரிநாதர். முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் வடிவேல் முருகன் பெருங் கருணை அத்தகையது!

முருகனுடைய பல்வேறு வடிவங்கள் பற்றியும் கோயில்கள் பற்றியும் பண்டைய வடமொழிப் புராண நூல்களிலும் ஆகமங்களிலும் விரிவாகக் காட்டப் பெற்றுள்ளன.

* ஊரின் வடபுறத்தில் தான் முருகனுக்குக் கோயில் கட்டவேண்டும் என்று அக்கினிபுராணம் பேசும். ஊருக்குக் கிழக்குத் திசை நீங்கலாக ஏனைய திசைகளில் முருகனுக்குக் கோயில் கட்டலாம். முருகன் கோயில் திருச்சுற்றில் யானை அல்லது மயில் அமைக்கப்பட வேண்டும். அக்கினி புராணத்தில் முருகனுக்கு இருகரங்களே குறிப்பிடப் பெற்றுள்ளன. வலக்கரத்தில் சக்தியும் இடக்கையில் கோழியும் பொருந்தியிருக்கும்.

குப்தர் காலத்தைச் சேர்ந்த பிரஹத் ஸம்ஹிதை என்னும் நூலில் (கி.பி 5 ஆம் நூற்றாண்டு) முருகனை இளைஞனாக மயில் மீது அமர்ந்த கோலத்தில் கையில் வேலுடன் விளங்குமாறு அமைக்கவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

விஷ்ணு தருமோத்தரம் என்ற நூலில் முருகவேள் ஆறு முகங்களுடனும் நான்கு கைகளுடனும் எழில் மிக்க மயில் மீது அமர்ந்தவனாகவும், தலையில் குடுமி யும், வலக்கைகளில் கோழியும் மணியும், இடக்கை

---

* "தச்சூர் வடக்காகும் மார்க்கத்தமர்ந்த பெருமாளே" என்று அருணகிரிநாத சுவாமிகள் கூறுவது இதனை உறுதிப்படுத்தும். தற்காலத்தில் இத்தலம் ஆண்டார்குப்பம் என வழங்கப்படுகிறது.

களில் வெற்றிக் கொடியும் வேலும் கொண்டவனாகவும் காட்டப்படுகிறது.

சமரங்கன சூத்திரதாரம் என்ற நூலில் முருகன் அழகான இளம் பிள்ளையாகக் கூறப்படுகிறான். ஒரு முகம் அல்லது ஆறு முகங்கள் கொண்டவனாக இருக்கலாம். நகரங்களில் வைக்கப் பெறும் வடிவங்களில் பன்னிரு கரங்களும், கிராமங்களில் வைக்கப் பெறும் வடிவங்களில் இரு கரங்களும், ஏனைய இடங்களில் வைக்கப் பெறும் வடிவங்களில் ஆறு கரங்களும் இருக்கலாம் எனக் கூறப்படுகிறது.

மத்ஸ்ய புராணமும் முருகன் வடிவங்களைக் காட்டுகின்றது. இளமைப் பொலிவும் உதய ஞாயிறு போன்ற ஒளியும் கொண்ட முருகவேளின் பன்னிரு கரங்கள் கொண்ட வடிவம், நான்கு கரங்கள் கொண்ட வடிவம், இரு கரங்கள் கொண்ட வடிவம், என இவ்வாறு விளக்கப்படுகின்றது.

சிவபுராணத்தில் முருகவேள் நான்கு கரங்கள் கொண்டவராகக் காட்டப் பெறுகிறார்.

முருகனை முக்கிய மூர்த்தமாகக் கொண்ட கோயில் சுவயம்பிராதனக் கோயில் எனப்படும். அதற்கு எட்டுத்திசைகளிலும் சிற்றாலயங்கள் இருக்க வேண்டும். அவற்றில் முறையே யக்ஷேந்திரன், ரக்ஷேந்திரன், பிசாசேந்திரன், பூதரதன், கந்தர்வன், கின்னரன், தைத்திய நாயகன், தானவதீபன் என்போர் சுற்றுப்புற தெய்வங்களாக அமைந்திருப்பர்.

இவர்களைக் கிழக்குத் திசையில் யக்ஷேந்திரன் என்று தொடங்கி முறையாக அமைக்க வேண்டும்.

'குமார தந்திரம்' என்ற நூலில், சுற்றுப்புற தெய்வங்களின் எண்ணிக்கை 8, 12, 16, 32 என்று அமைக்கலாம் எனவும், முன் குறித்த எண்வகைத் தெய்வங்களேயன்றி, சண்முகன், சக்திபாணி, கார்த்திகேயன், குகன் கந்தன், மயூரவாகனன், சேனானி, சக்தி ஹஸ்தன் என்போர் மெய்ப் பாது காவலராக இருக்க வேண்டும் எனவும் கூறப் பட்டுள்ளது. மெய்ப் பாதுகாவலர்களுக்கும் முருகனின் திருப் பெயர்களையே சூட்டியுள்ளமை குறிப்பிடத் தக்கது. இரண்டாவது திருச்சுற்றில் கிழக்கிலிருந்து சண்முகன் முதலிய எண்வரும் முறையாக அமைக்கப் படவேண்டும்.

முருகன் அமர்ந்த திருக்கோலத்தில் இரு கரங் களும், நின்ற திருக்கோலத்தில் நான்கு கரங்களும், மயில் மீது அமர்ந்த திருக்கோலத்தில், 6, 8, அல்லது 12 கரங்களும் கொண்டிருக்கலாம் என்று கூறப் பட்டுள்ளது. மூலவர் உட்கார்ந்த நிலையிலும், உற்சவர் (எழுந்தருளும் திருவீதி நாயகர்) நின்ற நிலை யிலும் இருக்கலாம். அன்பர்கள் மனம் ஒன்றி வழிபட ஏதுவாக மயில் மீதமர்ந்த முருகவேள் கோலம் அமைக்கலாம்.

இரு கரங்களுடன் முருகன் திருவுருவம் அமையும் போது ஐந்து வகைகளாக அவரது கரங்கள் காட்டப் படுகின்றன.

| வகை | வலக்கரம் | இடக்கரம் |
|---|---|---|
| 1 | தாமரை மலர் | கட்யவலம்பிதம் (இடுப்பில் வைத்த நிலை) |
| 2 | அப்யம் | கட்யவலம்பிதம் |
| 3 | தண்டாயுதம் | கட்யவலம்பிதம் |
| 4 | சக்தி (வேல்) | வஜ்ரம் |
| 5 | சக்தி (வேல்) | கோழி |

முருகவேள் நான்கு கரங்கள் கொண்டிருப்பின் அவரது கரங்கள் ஏழு வகைகளில் விளக்கம் பெறுகின்றன.

| வகை | கரங்கள் | | கரங்கள் | |
|---|---|---|---|---|
| | முன் வலது | பின் வலது | முன் இடது | பின் இடது |
| 1 | அபயம் | சக்தி | வரதம் | வஜ்ரம் |
| 2 | அபயம் | அட்சமாலை (ஜபமாலை) | வரதம் | கமண்டலம் (கிண்டி) |
| 3 | அபயம் | அட்சமாலை | கட்யவலம்பிதம் | சமண்டலம் |
| 4 | அபயம் | சக்தி | கட்யவலம்பிதம் | கோழி |
| 5 | அபயம் | சக்தி | அட்சமாலை | கோழி |
| 6 | அபயம் | சக்தி | கட்யவலம்பிதம் | கமண்டலம் |
| 7 | கத்தி | சக்தி | கேடயம் | கோழி |

ஆறு கரங்கள் கொண்ட முருகவேள் வடிவத்தில் வலக்கைகளினில் ஒன்று அபய முத்திரையுடன் திகழ,

ஏனைய வலக்கரங்கள் இரண்டிலும் கத்தியும் சக்தியும், காணப்பெறும். அவரது இடக்கரங்களில் கேடயம், அட்சமாலை, கோழி காணப்பெறும்.

எட்டுக் கைகள் கொண்டிருந்தால் அவற்றில் முறையே அபயம், வரதம், வஜ்ரம், சக்தி, கத்தி, கேடயம், வில், அம்பு ஆகியன அமையும். சில வடிவங்களில் அபயம், வரதம், தாமரை, வஜ்ரம், சக்தி, கத்தி, கேடயம், பாசம் ஆகியன அமைந்திருக்கும்.

பன்னிரு கரங்கள் கொண்ட முருகவேள் வடிவங்களில் அவர் கொண்ட ஆயுதங்கள் ஆறுவகைகளில் வேறுபடுகின்றன.

பன்னிரு கரங்கள்

| வகை எண் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|---|
| 1 | சக்தி | அம்பு | கத்தி | கொடி | கதை | அபயம் |
| 2 | சக்தி | அம்பு | கத்தி | சக்கரம் | பாசம் | பிரசாரித முத்திரை |
| 3 | சக்தி | கொடி | கத்தி | சக்கரம் | பாசம் | அபயம் |
| 4 | சக்தி | கொடி | கத்தி | தாமரை | அபயம் | அம்பு |
| 5 | சக்தி | வஜ்ரம் | சக்கரம் | பாசம் | அங்குசம் | கதை |
| 6 | சக்தி | அம்பு | கத்தி | அபயம் | வில் | கேடயம் |

| | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
|---|---|---|---|---|---|---|
| 1 | வஜ்ரம் | வில் | கேடயம் | தாமரை | சூலம் | வரதம் |
| 2 | வஜ்ரம் | சங்கு | கோழி | வில் | தண்டு | கலப்பை |
| 3 | வஜ்ரம் | வில் | கேடயம் | கோழி | அங்குசம் | வரதம் |
| 4 | வஜ்ரம் | பாசம் | கேடயம் | தண்டு | அங்குசம் | வரதம் |
| 5 | சூலம் | அபயம் | தாமரை | தண்டு | அங்குசம் | வரதம் |
| 6 | சூலம் | கோழி | சக்கரம் | பாசம் | அங்குசம் | வரதம் |

முருகவேளின் வடிவங்களை தியானரத்னவளி என்ற நூலில் மூன்று வகையாகக் காணலாம். அவர் சாத்துவிக வடிவம் ஏற்கும்போது ஒரு முகமும் இரு கரங்களும் கொண்டு திகழ்கிறார். அவரது கரங்களில் சக்தி ஆயுதமும் தாமரையும் திகழ்கின்றன. அவரது இராஜஸ வடிவத்தில் அவர் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு விளங்குகிறார். வஜ்ரம், சக்தியாயுதம், அபயம், வரதம் என அவரது கைகள் அமைகின்றன. அவரது தாமஸ வடிவத்தில் ஆறுமுகமும் பன்னிரு கரங்களும் கொண்டு அவர் காட்சியளிக்கிறார். சக்தி, வஜ்ரம், வாள், திரிசூலம், அபயம், பாசம், தனுசு, சக்கரம், கேடயம், குக்குடம், அங்குசம், வரதம் என்பன கொண்டு அவரது பன்னிரு கரங்கள் திகழ்கின்றன.

சனத் குமார பிரச்ன குமார தந்திரம் என்ற நூலில் முருகனது பதினாறு வடிவங்கள் கீழ்க் கண்டவாறு காட்டப்படுகின்றன.

1. ஞானசக்திதரன், 2. ஸ்கந்தன், 3. அக்னி ஜாதா, 4. சௌரபேயன், 5. காங்கேயன், 6. சரவண பவன், 7. கார்த்திகேயன், 8. குமாரன், 9. சண்முகன், 10. தாரகாரி, 11. சேனாபதி, 12. குகன், 13. பிரம்மசாரி, 14. சிவதேசிகன், 15. கிரௌஞ்சதாரி, 16. சிகிவாகனர்.

பேரறிஞர் T. A. கோபிநாத் ராவ் அவர்கள் குமார தந்திரம் என்ற நூலின் மற்றொரு வகையான முருகனின் பதினாறு வடிவங்களைக் காட்டுகிறார்.

1. சக்திதரன், 2. ஸ்கந்தன், 3. சேனாபதி, 4. சுப்ரமண்யன், 5. கஜவாஹனன், 6. சரவணபவன், 7. கார்த்திகேயன், 8. குமாரன், 9. சண்முகன், 10, தாரகாரி, 11. சேனானி, 12. பிரம்ம சாஸ்தா, 13. வள்ளி கல்யாண சுந்தரர், 14. பால சுவாமி 15. கிரௌஞ்ச பேதனர், 16. சிகிவாகனர்.

மைசூர் கிருஷ்ணராஜா என்பவர் தொகுத்த 'ஸ்ரீ தத்துவநிதி' என்ற நூலினைத் தஞ்சை சரஸ்வதி மஹால் நூல் நிலையம் பதிப்பித்துள்ளது. அந்நூலில் முருகனுக்கு 17 வடிவங்கள் தரப்பட்டுள்ளன. அவை சனத்குமார ப்ரச்ன குமாரதந்திரம் என்ற சிற்ப நூலில் கூறப்பட்ட 16 வடிவங்களுடன் வேலாயுத சுப்ரமண்யர் என்ற வடிவமும் சேர்ந்துள்ளன.

அருணகிரிநாத சுவாமிகள் முருகப்பெருமானைப் பாடியுள்ள பாங்கில் காணும்போது முருகவேளின் வடிவங்களைக் கீழ்க்கண்டவாறு பிரித்து மகிழலாம்.

குழந்தை வடிவங்கள் : 1. பாலசுப்ரமணியன், 2. காங்கேயன், 3. கார்த்திகேயன், 4. குழந்தை வேலன், 5. சரவணபவன், 6. ஸ்கந்தன்.

பிரமசாரி வடிவங்கள் : 1. தேசிக சுப்ரமண்யன், 2. குருபரன், 3. ஞானசக்திதரன்.

தவவடிவம் : யோகாசாரிய மூர்த்தி.

பராக்கிரம வடிவம் : 1. அஜாரூடர், 2. பிரம்ம சாஸ்தா, 3. வில்லேந்தியவேலன், 4. கஜாரூடர், 5. சேனுபதி, 6. சிகிவாகனர், 7. தாரகாரி, 8. கிரௌஞ்ச பேதனர், 9. சகலகலாவல்லப மூர்த்தி, 10. வராஹோன்மத்த பங்கமூர்த்தி.

தேவியருடன் கூடிய வடிவங்கள் : 1. தேவசேனுபதி. 2. வள்ளி கல்யாண மூர்த்தி. 3. சண்முகர். 4. குமாரர்.

பிறவடிவங்கள் : 1. குகன், 2. ஹ்ருதயகமல மூர்த்தி (இதயத்தாமரையில் விளங்குபவர்), 3. சிவனே வழிபடும் முருகன், 4. சதாசிவமூர்த்தி, 5. யாகரட்சக மூர்த்தி (யாகம் / வேள்வியைக் காப்பவர்), 6. விசுவரூப மூர்த்தி, 7. நடன முருகன், 10. அகத்தியருக்கு உபதேசம்.

தலமூர்த்திகள் : 1. சிதம்பரம் வடிவங்கள் 2. காஞ்சி குமர வடிவங்கள் 3. சீகாழி திருஞானசம்பந்த முருகன், 4. திருச்செந்தூர் வடிவங்கள் (அலை வாயுகந்த பெருமாள்; குமரவிடங்கர்), 5. திருத்தணிகை வடிவங்கள், 6. திருப்பழநி வடிவங்கள், 7. திருவானைக்கா முருகன், 8. திருவருணை வடிவங்கள் என்று இவ்வாறாக திருப்புகழில் அருணகிரிநாதர் முருகனது வடிவங்களைப் போற்றுகிறார்.



தேவ சேனாபதி
(ஒரு முகம் - நான்கு கரங்கள்)
சென்னிமலை (பக்கம் - 37)

சுப்பிரமணியர் →
திருவிடைக்கழி (பக்கம் - 39)





← பாலசுவாமி
போரூர்
(பூவிருந்தவல்லி அருகில்)
(வலக்கரம் ஞானசக்தி
இடக்கரம் நீலோத்பலம்)

(பக்கம் - 57)



கஜாரூடர்

(யானை வாகனத்தில்)

சிதம்பரம் கிழக்குகோபுர வாயில் (பக்கம் - 40)



சென்னிமலை (ஒரு முகம் - ஆறுகரங்கள்)

சரவணபவன் ★ சிம்மவாகனம்

திருப்போரூர் (ஒரு முகம் - நான்கு கரங்கள்)
(பக்கம் - 42)



கார்த்திகேயன்

(ஆறுமுகம் - ஆறுகரங்கள்) கும்பகோணம்
ஸ்ரீ ஆதிகும்பேச்வரர் திருக்கோயில் (பக்கம் - 44)





கார்த்திகேயன்
(ஆறுமுகம் - ஆறுகரங்கள்) தாராசுரம்
ஸ்ரீ ஐராவதேச்வரர் திருக்கோயில்
(பக்கம் - 44)



குமாரசுவாமி
கங்கை கொண்ட
சோழபுரம்
(பக்கம் - 45)





சண்முகர் (ஆறுமுகசுவாமி)
சிறுவாபுரி ஸ்ரீ பாலசுப்ரமண்யர் திருக்கோயில் (பக்கம் - 50)



தாரகாரி

உத்தரமேரூர் ஸ்ரீ கந்தசாமி திருக்கோயில்

(ஆறுமுகம் - பன்னிரு கரங்கள்) (பக்கம் - 51)

451



1. ஞானசக்திதரன்

ஞான சக்தியைத் தரித்தவன் என்று பொருள் தரும் இத்திருப்பெயருடன் விளங்கும் முருகவேள், ஞான சக்தியாகிய வேலினைத் தமது வலக்கையில் ஏந்தி, இடக்கையைத் இடுப்பில் வைத்த இவ் வடிவத்தை குமார தந்திரம் என்ற நூல் ஒருமுகமும் இருகரமும் கொண்ட கோலமாகக் காட்டுகிறது.

திருத்தணிகை மூலவர் ஞானசக்திதரர். திருச்சி மாவட்டம் பழுவூரிலும் இவ்வடிவம் காணப் பெறு கிறது. தஞ்சை மாவட்டத்தில் திருவையாறு அருகில் உள்ள திருக்கண்டியூரில் (அஷ்ட வீரட்ட தலங்களில் ஒன்று) ஞானசக்திதரர் வடிவம் வலக்கையில் ஜப மாலையும் இடக்கரத்தில் வஜ்ர சக்தியும் கொண்டு திகழ் கிறார். இவரை 'ஞானஸ்கந்தர்' என்று அழைக் கிறார்கள்.

ஞான சக்திதரன் வடிவ அமைப்பினைத் தணிகைப் புராணம் கீழ்வருமாறு (குமார தந்திரத்தில் உள்ளது போல்) காட்டுகின்றது.

**இச்சா ஞானக் கிரியை எனும்**
**இவைமுன் றிலையாய்க் கிளைத்தெழுந்திட்(டு)**
**அச்சான் ஆழி யறச் சுவற்றும்**
**அயில்வேல் ஒருகை வலத்தமைத்து**
**நச்சா தவரைத் தெறும் ஒருகை**
**நளினங் குறங்கின் அமைத்திமையோர்**
**விச்சா தரர்சூழ் ஞானசத்தி**
**தரனது(உ)ருவம் விதிப்போரும்.**

*— அகத்தியன் அருள்பெறுபடலம்-64*

*(கவிராட்சசக் கச்சியப்ப முனிவர் இயற்றிய தணிகைப் புராணம்)*

வெற்றியைத் தரும் வேலைக் கையிலேந்தியவன் ஆதலின் இம்மூர்த்தியை வழிபட எடுத்த காரியம் யாவிலும் வெற்றிகிட்டும் என்பது உறுதி.

## 2 கந்தசுவாமி

'ஸ்கந்தன்' என்று வடமொழியிலும், 'கந்தன்' என்று தமிழிலும் போற்றப் பெறுகிறான் முருகன். ஸ்கந்தன் என்று சொல்லுக்கு வெளிப்படுபவன் என்று பொருள். (ஸ்கந்த-வெளிப்படல்) மேகத்திலிருந்து மின்னல் வெளிப்படுவது போல சிவ ஜோதியிலிருந்து ஆறு பொறிகள் வெளிப்பட்டு வந்ததால் ஸ்கந்தன் என்று பெயர் வந்தது. கந்து—நடுதறி; யாவர்க்கும் பற்று கோடாய்த் திகழ்பவன். 'காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்' என்று திருக்குறளில் வருமிடத்து 'கந்து' என்ற சொல்லை பற்றுக்கோடு என்ற பொருளில் குறிப்பிட்டுள்ளார் திருவள்ளுவர். ஐம்புலவயப்பட்ட ஆன்மாவைக் கட்டும் நடுதறியாகக் கந்தன் விளங்குகிறான். பகைவர் வலிமையை வற்றச் செய்பவன். கடவுளர் பலரின் ஆற்றலும் கூறும் ஒருங்கே திரண்டவன்.

'கந்து' என்ற சொல்லுக்கு தண்டாயுதம் என்று பொருள் கொண்டால் தண்டாயுதம் கொண்டவன் என்ற பொருளும் வரும். அன்பர்களுக்கு எல்லாம் வழங்கியருளும் சித்தராக பழநியில் விளங்கும் கந்த சுவாமியை தண்டபாணி என்று போற்றுகிறோம். 'சித்தன் வாழ்வு' என்பதும் பழநிக்கு ஒரு பெயர். சுவாமிமலையில் விளங்கும் மூலவர் (சுவாமிநாதப் பெருமான்) கந்த சுவாமி வடிவமே.

நின்ற கோலத்தில் ஒருமுகமும் இருகரங்களும் கொண்டவர் கந்தசுவாமி: வலக்கரத்தில் தண்டாயுதமும் இடக்கரம் கட்யவலம்பித நிலையில் (இடுப்பில் ஊன்றியவாறு) உருத்திராக்கம், மணிவடம் அணிந்து கோவணதாரியாக விளங்குகிறார் என்று குமாரதந்திரம் காட்டுகிறது.

ஸ்ரீ தத்வநிதியில் கந்தன் கீழ்க்கண்டவாறு விளங்குகிறார். ஒருமுகமும் நான்கு கரங்கள் கொண்டு தாமரை மீது அமர்ந்து கரண்ட மகுடம் தரித்து விளங்குகிறார் கந்தன். வலக்கரங்கள் அபயமும், கோழியும், இடக்கரங்கள் வரதம், வஜ்ஜிர மாகவும் திகழ்கின்றன. மார்பில் மாலைகளும் மணிகள் இழைத்த அணிகலன்களும் அணிந்து, இடையில் கடிபந்தத்துடன் திகழ்கிறார் கந்தன்.

'சேயவன் வடிவம் ஆறும் திரட்டி நீ ஒன்றாய்ச் செய்தாய் ஆயதனால் கந்தனும் நாமம் பெற்றான்' என்று கந்தபுராணத்தில் கந்தன் என்ற சொல்லுக்கு விளக்கம் தரப்பட்டுள்ளது. இக்கருத்தைக் குமர குருபரரும் கந்தர் கலிவெண்பாவில் காட்டுகிறார்.

தணிகைப் புராணத்தில் வருணிக்கப்படும் கந்தன் திருவுருவம் பழநி தண்டபாணியையே உறுதிப் படுத்தும்.

**வைவாய்க் கணிச்சிப் படையென்ன**
**வதிவித் திடுங்கோ வணத்தண்டு**
**கைவாய் வலத்தின் அமைத்தருளி**
**கடியில் இடக்கை பதித்தருளி**

ஐவாய் வழங்கும் பொறியுலனை
யவித்த வுறுவர் இமையவர்கள்
உய்வானிறைஞ்ச அருள் வழங்கும்
கந்தன் உருவம் உஞற்று நரும்

—அகத்தியன் அருள்பெறுபடலம்-65

கந்தன் எனும் சொல் அரும்பெரும் சொல். கந்தரநுபூதி, கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தர் கலிவெண்பா, கந்த புராணம், கந்தர் சஷ்டி என்பவை இதனை வலியுறுத்தும்.

கொங்கு நாட்டில் பல திருக்கோயில்களில் கந்தசுவாமி திருவுருவமே காணப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது. சர்வகாரியங்களும் சித்திபெற ஸ்கந்த மூர்த்தியை வழிபடுதல் வேண்டும்.

## 3. தேவசேனபதி

தேவயானையின் கணவன் என்ற பொருள்படும் இப்பெயர் தேவசேனையுடன் விளங்கும் முருகனைக் காட்டுகிறது. தேவேந்திரன் மகளாக ஐராவதத்தினுல் வளர்க்கப் பெற்ற தேவயானையைத் திருப்பரங்குன்றத்தில் முருகவேள் திருமணம் செய்து கொண்டதைக் கந்தபுராணம் விரித்துக் கூறுகிறது.

தேவசேனபதி வடிவத்தில் முருகவேள் ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டவராய், தேவயானை அம்மையாருடன் எழுந்தருளியுள்ளார். முருகவேள் தனது இடப்பாகத்தில் தெய்வயானையை ஒருகையால் அணைத்த நிலையிலும் மற்றொரு கை 'அஞ்சேல்' என்று அடியார்களுக்கு அபயம் அளிக்கவும் ஏனைய பத்து கைகளிலும் சக்தி, சூலம், அம்பு, வாள், தண்டு,

வஜ்ரசக்தி, கோழிக் கொடி, வில், கேடயம், தாமரை மலர், ஆகியவற்றைத் தாங்கி விளங்குகிறார்.

ஸ்ரீ தத்வநிதியில் இம்மூர்த்தி ஒரு முகமும் இரு கண்களும், நான்கு கரங்களும் கொண்டவராய் தேவசேனாதியாய் விளங்குகிறார். கரங்கள் முறையே அபயம், வரதம், சங்கம், சக்ரம் உள்ள இவ்வரிய அமைப்பை சென்னிமலையில் காணலாம்.

தணிகைப் புராணத்தில் தேவசேனாபதி வடிவம் தெய்வயானையைத் தழுவிய கோலமாகவே காட்டப் பெறுகின்றது.

**ஒருகை தனது வலக் குறங்கின்**
**அணங்கைத் தழுவி யுகளமுலை**
**மருவ அபயம் ஒன்றாக**
**வளர் தோல் வாள் சூலம்குலிசம்**
**பொருவேல் வாள்வில் கதைபுள்ளம்**
**புயங் கோல் பத்தும் கரம்பத்தின்**
**இருவும் ஆறு முகத் தேவ**
**சேனாபதி சீரிழைப் போரும்.**

— *அகத்தியனருள் பெறுபடலம்: 66*

மங்களகரமான மணவாழ்வுபெற இம்மூர்த்தியை வழிபட வேண்டும்.

## 4. சுப்பிரமணியர்

வேதத்துக்கும் வேதியர்களுக்கும் முதல்வர் என்னும் பொருள் கொண்ட முருகவேள் திருப் பெயரே சுப்பிரமணியர் என்பதாகும். பாம்பன் சுவாமிகள் கருத்தின்படி இன்பத்தினையே இயல்பாகவுடைய

சிவபரம் பொருளினின்றும் தோன்றி அதனின் வேறல்லதாய் விளங்குபவன். (சு + பிரமம் + ண்யம் (ணியம்) சு—சுகம்; ஆனந்தம். பிரம்ம—சிவபரம் பொருள். ண்யம் (ண்யம்)—அதனின்றும் தோன்றி ஒளிர்வது. சிவபிரானும் முருகனும் தம்முள் ஒருவரே யன்றித் தமக்குள் பேதம் இல்லாதவர் என்பதும் பெறப்படும்.

ஒருமுகமும் இருகரங்களும் கொண்ட இவ்வடிவத்தில் முருகவேள் தனது வலக்கையால் அபய முத்திரை காட்டி இடக்கையை இடுப்பில் வைத்தவராய்த் திகழ்கிறார்.

மற்றொரு குறிப்பின்படி சுப்பிரமணியர் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு விளங்குகிறார். வலக்கரங்களில் அபயமும், சத்தி ஆயுதமும் கொண்டும் இடக்கரங்களில் கோழியும் தாமரையும் கொண்டு திகழ்கிறார். தோள்களில் கேயூரமும் மார்பில் மாலைகளும் அணிந்துள்ளார்.

தணிகைப் புராணம் காட்டும் சுப்பிரமணியர் திருவுருவம் ஒரு முகமும் இருகரங்களும் கொண்டதாகவே அமைகிறது.

இருள்கால் சீக்கும் மணிக்கடக
    இடக்கை கடியிற் கொளவிருவி
வெருள்கா லுனத் தோர்க்(கு) அஞ்சலென
    விரவும் பயஞ்சா டபயமெனத்
தெருள்கா லொருகை வலத்தமைத்துத்
    திகழ்ந்து பணிவோர் தமக்கெல்லாம்
அருள்கால் விழிச் சுப்பிரமணிய
    அண்ணல் உருவம் அமைப்போரும்

—அகத்தியனருள் படலம். 67

தஞ்சை மாவட்டத்தில் திருக்கடவூர் (அஷ்ட வீரட்ட தலங்களில் ஒன்று) அருகிலுள்ள திருவிடைக் கழி சுப்ரமணிய சுவாமி இத்திருக்கோலத்திலேயே திகழ்கிறார். அவரது புன்முறுவல் பூத்தலர்ந்த் பூங்குமுதச் செவ்வாயின் அழகொன்றே போதும்! அந்தத் திருக்கை வடிவேலழகிய பெருமானைப் பார்த்துக்கொண்டே நிற்கலாம், எவ்வளவு நேரம் வேண்டுமானாலும்!

ஆனந்தத்தையே சொரூப லட்சணமாக உடைய சுப்பிரமணிய மூர்த்தியை வழிபட வினைகள் நீங்கி ஆனந்தப் பேறு பெறலாம்.

## 5. களிற்றூர்திப் பெருமான் (கஜவாகனர்)

முருகவேள் யானையை வாகனமாகக் கொண்டு எழுந்தருளிய கோலம் இது. கஜாரூடர், கஜவாகனர் எனவும் அழைக்கப் பெறுகிறார். மிகப் பழைமையான கோயில்கள் பலவற்றில் முருகன் சன்னதியின் முன்பாக யானை வாகனமே இருக்கக் காணலாம். (திருத்தணிகை, சுவாமிமலை, உத்தரமேரூர்) தேவேந்திரனது ஐராவதம் முருகவேளுக்கு வாகனமாக இருந்ததைக் கந்தபுராணம் காட்டுகிறது.

அருள் செய்வதற்கும் போர் புரிவதற்கும் எழுந்தருளும் போது முருகவேள் "பிணிமுகம்" என்னும் யானை மேற் செல்வார். அடியார்களின் துயர் நீக்க முருகவேள் யானை வாகனமேறி வருவதை "உன்றனது சிந்தை சந்தோஷித் தாளு கொண்டருள வந்து சிந்துரத் தேறி" என்று சிதம்பரம் திருப்புகழில் அருணகிரியார் குறிப்பிடுவார்.

முகர முகபட கவன தவளகர அசல மிசைவரு அபிநவன் என்று மற்றோர் இடத்தில் போற்றுவார். "வேழம் மேல்கொண்டு", "அங்குசம் கடாவ ஒருகை"; "ஓடாப் பூட்கைப் பிணி முகம் வாழ்த்தி" என்று திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் குறிப்பிடுவார். மேலும் சங்க இலக்கியங்களில் "சேயுயர் பிணிமுகம் ஊர்ந்தமர் உழக்கி" (பரிபாடல்-5.2) "கடுஞ்சின விறல் வேள் களிறு ஊர்ந்தாங்கு" (பதிற்றுப் பத்து) "மாறு வென்றிப் பிணிமுக ஊர்தி ஒண் செய்யோனும்"— (புறநானூறு 56) என்றெல்லாம் போற்றப் பெறும்.

ஆண் யானை மீது முருகவேள் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு எழுந்தருளும் இக்கோலம் குமார தந்திரத்தில் காட்டப்படுகிறது. குக்குடம், சக்தி தரித்த கரங்கள் இரண்டும் அபயவரதமாக இரு கரங்களும் கொண்டுள்ளார். மற்றொரு குறிப்பின்படி வலக்கரங்கள் இரண்டிலும் வேலும் வாளும் கொண்டதாகவும், இடக் கரங்கள் இரண்டிலும் கோழிக் கொடியும் கொண்டும் விளங்குகிறார்.

சிதம்பரம் கீழ்க் கோபுர வாயில் அருகில் கஜாரூடர் திருவுருவம் அற்புதமாக அமைந்துள்ளது. இதனை அருணகிரியார் கீழ்க் கோபுர வாயில் முருகனைப் பாடும் போது குறிப்பிடுவது மிகவும் சிறப்பாகும்.

தஞ்சை மாவட்டம் திருமருகல் திருக்கோயிலிலும், வள்ளிமலை அருகில் உள்ள மேல்பாடி திருக்கோயிலிலும் உள்ள கஜவாகன வடிவங்கள் சிறப்பாக உள்ளன.

களிற்றூர்திப் பெருமானின் திருவுருவ அமைப்பினைத் தணிகைப்புராணம், குக்குடம் (கோழி), வாள், வேல் ஆகியவைக் கொண்டதாகவும் ஒரு கரம் வரத முத்திரையிலும் உள்ளதாகவும் காட்டுகிறது.

ஒற்றை முகமும் இணைவிழியும்
உம்மைப் பயனும் ஒருங்களிக்கும்
கொற்ற வரத மூன்றலைக்குக்
குடமோர் இரண்டும் இடங்கதிர்ப்ப
மற்றை வலப்பான் மணிவேலும்
வாளும் கதிர்ப்பக் கரநான்கும்
பெற்ற மதவெங் களிற்றூர்திப்
பெருமான் உருவம் சமைப்போரும்

— *அகத்தியனருள் பெறுபடலம்: 68*

*கஜவாகனப் பெருமானை வழிபட துன்பங்கள் நீங்கி மன நிம்மதியும் மகிழ்ச்சியும் உண்டாகும்.*

## 6. சரவண பவன்

*சிவபெருமான் நெற்றிக் கண்ணிலிருந்து வெளிப் பட்ட ஆறுதீப் பொறிகள் ஆறு குழந்தைகளாகி நாணற் புல் நிறைந்த சரவணப் பொய்கையில் தாமரை மலர்களில் வீற்றிருந்தன. (சரம்—நாணல்)*

மறைகளின் முடிவால் வாக்கால்
மனத்தினால் அளக் கொணமல்
நிறைவுடன் யாண்டும் ஆகி
நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக உருவாய்த் தோன்றி
அருளொடு சரவணத்தின்
வெறிகமழ் கமலப் போதில்
வீற்றிருந் தருளினனே.

*என்று கந்தபுராணம் போற்றும். சிவபெருமானின் ஐந்து முகங்களோடு அதோ முகமும் சேர்ந்து முருகனுக்கு ஆறுமுகங்கள் ஆயினாற் போல, சிவபெருமானுக்குரிய திருஐந்தெழுந்தே பிரணவத்*

துடன் சேர்ந்து முருகனுக்குரிய 'சரவண பவ' என்னும் தாரகப்பிரமம் ஆகிய ஆறெழுத்து மந்திரம் ஆயிற்று என்பர். சரவணன் என்பது சிவபிரானையும் திருமாலையும் குறிக்கும் பெயர் என்றும், முருகனுக்குச் சரவண பவன் எனப் பெயர் வழங்குவதால் அவன் அவ்விருவர் தம் இயல்புகளையும் பொருந்தி நிற்பவன் என்று திருச்செந்தூர் புராணம் கூறும்.

குமார தந்திரத்தில் இத்திருவுருவம் ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டதாகக் காட்டப்படுகிறது. அவரது இரு கரங்கள் அபய வரவதமாகவும் ஏனைய கரங்களில் சக்தி, மணி, கோழிக்கொடி, தாமரை மலர், கோழி, பாசம், தண்டம், உளி, அம்பு, வில் ஆகியவற்றை ஏந்தி மஞ்சள் வர்ண மேனியாய்த் திகழ்கிறார்.

ஸ்ரீ தத்வநிதியில் ஒரு முகமும் ஆறுகரங்களும் கொண்டதாக சரவணபவன் கோலம் கூறப்படுகிறது. உடல் முழுதும் திருநீறு அணிந்து சிங்கத்தின் மீது எழுந்தருளிய இப்பெருமான் தனது ஆறுகரங்களிலும் முறையே மலர் அம்புகள், கரும்பு வில், கத்தி, கேடயம், வஜ்ரம், கோழி ஆகியவற்றை ஏந்தியுள்ளார். இருள் கடிந்து எழுதரு ஞாயிற்றைப் போன்று ஒளி மிகவுடைய இப்பெருமானை சென்னிமலையில் கண்டு களிக்கலாம். திருப்போரூரில் சரவணபவன் வடிவம் ஒருமுகம், நான்கு கரங்களுடன் (சென்னிமலையில் உள்ளது போல் ஆறுகரங்கள் அல்லாமல்) சிம்ம வாகனத்துடன் காட்சியளிக்கிறது.

ஆறுமுகங்களும் பன்னிருகரங்களும் கொண்டு சரவணபவன் விளங்குகிறான் என்று தணிகைப்புராண ஆசிரியர் காட்டுகின்றார்.

ஞாங்கர்ப் படைகே டகம் கண்டை
நளினம் சேவல் கதை யிடங்கம்
ஓங்கும் பகழி வாள் வரதம்
ஒளிரும் அபயம் சிலையவைதாம்
தாங்கும் கரங்கள் ஈராறும்
தயங்கும் வதனம் ஓராறும்
ஆங்க விளங்க அருட் சரவ
ணபவன் உருவம் ஆக்கு நரும்

—*அகத்தியனருள் பெறுபடலம்-69*

மங்கலம், ஒளி, கொடை, சத்துவம், வீரம் ஆகிய பேறுகளைப் பெற இம்மூர்த்தியை வழிபட வேண்டும்.

## 7. கார்த்திகேயன்

வட இந்தியாவில் கார்த்திகேயன் என்ற பெயரே முருகனுக்குகந்த பெயராகத் திகழ்கிறது. கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப் பெற்றதால் கார்த்திகேயன் என்று முருகன் போற்றப் பெறுகிறான்.

ஆறு முகங்களும் ஆறு கரங்களும் கொண்டவன் கார்த்திகேயன் என்று குமார தந்திரம் கூறுகிறது. தமது நான்கு கரங்களிலும் முறையே சக்தி, வாள், குலிசம் (வச்சிரம்), கேடயம் ஆகியவைகளுடன் இருகரங்கள் அபய, வரதமாகவும் கொண்டு எழு ஞாயிறு வண்ண முடன் விளங்குகிறார் இப்பெருமான்.

தணிகைப் புராணமும் இவ்வடிவத்தையே கார்த்தி கேயனாகக் காட்டுகின்றது.

சீர்த்த குலிசம் கேடகமே
செழித்த வரதம் இடப்பாலும்
கூர்த்த மணிவேல் வாள் அபயம்
குலாவு வலப்பாலுங் கவின

ஏர்த்த ஆறு மலர்க் கரமும்
இலங்கும் வதனம் ஓராறும்
சூர்த்த பிணிகள் தபுங் கார்த்தி
கேயன் உருவம் தொகுப்போரும்

— *அகத்தியன் அருள்பெறுபடலம் : 70*

கும்பகோணம் ஆதிகும்பேசுவரசுவாமி கோயிலில் விளங்கும் கார்த்திகேயன் ஆறுமுகங்களும் ஆறுகரங்களும் கொண்டு திகழ்கிறார். அவரது கரங்களில் ஜபமாலை, கட்கம் (கத்தி), வஜ்ரம், கேடயம் ஆகியவைகளுடன் வலக்கையொன்று அபயமாகவும் இடக்கை மடித்துள்ள அமைப்பிலும் உள்ளன.

தாராசுரம் (கும்பகோணத்திற்குத் தென்பால் விளங்கும் ராஜராஜேச்சரம்—இரண்டாம் ராஜராஜன் கட்டிய) ஐராவதேச்வரர் கோயிலில் விளங்கும் கார்த்திகேயன் ஆறுமுகத்துடன் ஒருகரம் அபயமாகவும் ஐந்து கரங்களில் ஜபமாலை, கத்தி, வாள், கேடயம், கோழி ஆகியவை ஏந்தியும் மயில் வாகனத்துடன் விளங்குகிறார். மணி மகுடம் தரித்த ஆறுமுகங்கள் மிகவும் அற்புதமாக உள்ளன.

ஸ்ரீ தத்வ நிதியில் கார்த்திகேயன் வடிவம் ஒரு முகமும் பத்து கரங்களும் கொண்டதாகக் காணப்படுகிறது. அவரது கரங்களில் சூலம், சக்கரம், அங்குசம், சக்தி, தோமரம் (உலக்கை), பாசம், சங்கம், வஜ்ரசக்தி ஆகியவைகளுடன் இருகரங்கள் அபயவரதமாகவும் உள்ளன. அவரருகே மயில் நிற்கின்றது. அவரது தலையில் வில்வபத்ரம் அல்லது பழம் சூடியுள்ளார்.

கார்த்திகேயனை கார்த்திகை நாளில் பூஜிப்போர் இகபர சௌபாக்யங்களைப் பெறுவர்.

## 8. குமாரசுவாமி

சுவாமி என்ற சொல்லும் குமரன் என்ற சொல்லும் முருகனையே குறிப்பன என்று முன்னரே காட்டியுள்ளோம்.

சிவபெருமான் தனது நெற்றிக் கண்ணினால் மாரனை எரித்தார்—அது நிக்கிரகம்.

சிவபெருமான் தனது நெற்றிக் கண்ணிலிருந்து குமாரனை அளித்தார்—அது அநுக்கிரகம்.

குமாரன் என்ற சொல்லுக்கு மலப்பிணியை அழிப்பவன் என்று பொருள். குமார தந்திரத்தில் குமாரர் வடிவம் ஒரு முகமும் நான்கு கரங்களும் உடையவராகக் காட்டப் பெறுகிறார். அவரது கரங்களில் சக்தி, வாள், கோழிக்கொடி, கேடகம் ஆகியவை திகழ்கின்றன. இவ்வமைப்பை திருச்சி மாவட்டம் கங்கை கொண்ட சோழபுரம்—இராசேந்திர சோழன் கட்டிய பெருங் கோயிலில் பஞ்சலோகப் படிமத்தில் கண்டு இன்புறலாம்.

தணிகை புராணத்தில் காட்டப் பெறும் குமாரக் கடவுள் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு அருகே வள்ளியுடன் விளங்குகிறார்.

**வைத்த சுடர்வேல் வாள் இரண்டும்**
**வலப்பால் இடப்பால் வாரணப்புள்**
**பைத்த மணித்தோள் ஓரிரண்டும்**
**பயில அலர்ந்த நாற்கரமும்**
**முத்த முறுவற் குறமாது**
**விளங்க முன்வந் தடுத்துமலைக்**
**கொத்து விளியக் கடைக்கணிக்கும்**
**குமாரன் உருவம் குயிற்றுநரும்**

*— அகத்தியன்அருள் பெறுபடலம் : 71*

நாகர்கோயிலுக்கருகிலுள்ள குமாரர் கோயிலில் குமாரர் வள்ளியுடன் திகழ்கிறார். இவர் இரண்டு கரங்களுடன் ஒன்று அபயமாகவும் மற்றொன்று வரதமாகவும் கொண்டுள்ளார். இவரைப் பற்றி விவரமாக 'கந்தனின் கவின்மிகு கோலங்கள்' என்ற பகுதியில் விவரிக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீ தத்வநிதியிலும் குமாரசுவாமி ஒரு முகமும் நான்கு கரங்களுடன் கத்தி, கேடயம் கொண்டு அபயவரதமாகக் காட்சியளிக்கிறார். ஆணவமல நீக்கம் பெற இப்பெருமானை வணங்குதல் வேண்டும்.

## 9. சண்முகர் / ஆறுமுக சுவாமி

சண்முகநாதர் அல்லது ஆறுமுகர் என்று போற்றப் பெறும் இத்திருவடிவில் முருகவேள் அடியார்களுக்கு அஞ்சுமுகம் (இடுக்கண்) தோன்றும் போதெல்லாம் தனது ஆறுமுகம் கொண்டு ஆறுதல் தந்தருள் புரிகின்றான்.

'அஞ்சுமுகம் தோன்றாமல்
ஆறுமுகம் காட்டவந்த
செஞ்சரணச் சேவடியைச்
சிந்தை வைப்பது எந்நாளோ?

— தாயுமான அடிகள்.

இறைமைக் குணங்கள் ஆறு. ஞானம், ஐசுவரியம், திரு, வீரியம், வைராக்கியம், புகழ் என்ற ஆறும் அவரது முகங்களாகத் திகழ்கின்றன.

ஆறுமுகப் பெருமான், தனது வலப் பக்கத்தில் வள்ளியம்மையாரையும் இடப்பக்கத்தில் தெய்வயானையம்மையாரையும் மயில் மீது இவர்ந்தோ உடனிருக்கவோ அமைந்த கோலம் இவ்வடிவம்.

இப்பெருமான் தனது வலக்கைகளில் வேல் (சத்தி) அம்பு, வாள், கோழிக்கொடி, திகிரி(கதை) ஆகியவை களுடன் ஒருகரம் அபயமாகவும், இடக்கைகள் ஒன்று வரதமாகவும் மற்றவைகளில் வச்சிரம், வில், கேடயம், தாமரை மலர், சூலம் ஆகியவை ஏந்தியும் விளங்கு கிறார். ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங்களிலும் கொண்ட அமைப்பு வகைகளை முன்னரே குறிப் பிட்டுள்ளோம்.

திருச்செந்தூரில் ஆறுமுகப் பெருமான் அருங் காட்சி தருகிறார். மயிலாப்பூர், குன்றக்குடி போன்ற தலங்களில் அமைந்துள்ள சண்முகப்பெருமான் திரு உருவ அமைப்புகள் விசேஷமானவை. நக்கீரர் தமது அருள்மிகும் திருமுருகாற்றுப்படையில் ஆறுமுகப் பெருமான் காட்சியை அற்புதமாகக் காட்டுகிறார்.

மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம், ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகிக்
காதலின் உவந்து வரங்கொடுத் தன்றே, ஒருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழா அ
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே, ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏமுறநாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே, ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம் வேட்டன்றே,
ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே. (91-102)

குமரகுருபர சுவாமிகள் தமது கந்தர் கலிவெண்பாவில் ஆறுமுக விளக்கமாக

.......................................... விண்மலி தோள்
வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூரனைத்தடிந்து
தெவ்வர் உயிர் சிந்தும் திருமுகமும் - எவ்வுயிர்க்கும்
ஊழ்வினையை மாற்றி உலவாத பேரின்ப
வாழ்வு தரும்செய்ய மலர் முகமும்-சூழ்வோர்
வடிக்கும் பழ மறைகள் ஆகமங்கள் யாவும்
முடிக்கும் கமல முகமும் -விடுத்து அகலாப்
பாச இருள்துரந்து பல்கதிரிற் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமும்- நேசமுடன்
போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும்
மோகம் அளிக்கும் முகமதியும் -தாகமுடன்
வந்து அடியிற் சேர்ந்தோர் மகிழ வரம்பலவும்
தந்து அருளும் தெய்வ முகத் தாமரையும் (41-46)

நக்கீரரும் குமரகுருபரரும் காட்டும் ஆறுமுக விளக்கம் ஒப்பிட்டு இன்புறற்குரியது.

| திருமுருகாற்றுப்படை | கந்தர் கலிவெண்பா |
|---|---|
| 1. ஒரு முகத்தினின்றும் தோன்றிய ஒளியால் உலக இருளகன்று மாசு நீங்கப்பெறும். | ஒரு முகம் தானவர் புகழும் சூரனை அழிக்கிறது. |
| 2. அன்பர்கள் தொழ அவர்கள் வேண்டிய வாறு வரம் அளிப்பது ஒரு முகம். | உயிர்களின் பழ வினையை அழித்து அந்தமில் பேரின்ப வாழ்வை ஒரு முகம் அளிக்கிறது. |
| 3. அந்தணர் வேள்விக்குக் காவலாக அமைகிறது ஒரு முகம். | மறைகளையும் ஆகமங் களையும் வழங்குகிறது ஒருமுகம். |
| 4. மெய் நூல்களாலும் உணர இயலாத பொருள்களை ஒருமுகம் விளக்குகிறது. | உயிர்களை விட்டு நீங்காதப் பாச இருளை அகற்றி, தாமரைமலர் போன்று ஒளி விடுவது ஒருமுகம். |



சேனானி (சேனாபதி)

தேவிகாபுரம் ஸ்ரீ பெரியநாயகி அம்மன் திருக்கோயில்)

(ஆறுமுகம் - பன்னிரு கரங்கள்) (பக்கம் - 52)

# பிரம்மசாஸ்தா

வலசரவாக்கம் (சென்னை)
(உயரம் எட்டடி)





ஆனூர் - (செங்கற்பட்டு)
வலக்கரம் ஒன்றில்
தாமரை மலர் (பக்கம் - 54)



வள்ளி கல்யாண சுந்தரர்
திருப்போரூர் ஸ்ரீ கந்தசுவாமி திருக்கோயில்
(பக்கம் - 56)



அக்னி ஞாதர்
(இரண்டு முகங்கள் - எட்டு கரங்கள்)
சென்னிமலை (பக்கம் - 62)



சௌர பேயர்

(நான்கு முகங்கள் - எட்டு கரங்கள்)

சென்னிமலை (பக்கம் - 63)



வில்லேந்திய வேலன்

(சம்ஹாரமூர்த்தி)

சாயாவனம் ஸ்ரீசாயாவனேசுரர் திருக்கோயில் (பக்கம் 67)



வில்லேந்திய வேலர்

(சம்ஹாரமூர்த்தி) (ஒரு முகம் - ஆறு கரங்கள்)

திருவண்ணுமலை (பக்கம்-68)



வில்லேந்திய வேலன்
பட்டீச்வரம் ஸ்ரீ தேனுபுரிச்வரர் கோயில்
தூண் சிற்பம் (பக்கம் - 69)

| | |
|---|---|
| 5. சிற்றத்துடன் அசுரர்களை அழிக்கிறது ஒரு முகம். | வள்ளியம்மையுடனும் தெய்வயானையம்மையுடனும் காதல் செய்கிறது ஒருமுகம். |
| 6. குறமகள் வள்ளியிடம் மகிழ்கிறது ஒருமுகம். | தன் திருவடிகளையடைந்த அடியவர்களுக்கு வேண்டிய வரங்களை அளிக்கிறது ஒருமுகம். |

மூன்றாவது விளக்கமாக அருணகிரிநாதர் கூறும் ஆறுமுகச் சிறப்பு அமைகின்றது.

ஏறுமயில் ஏறி விளையாடு முகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறும் அடியார்கள் வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே

என்று இவ்வாறாக ஆறுமுகப் பெருமை விரிக்கிற் பெருகும்.

குமார தந்திரத்திலும், ஸ்ரீதத்வநிதியிலும், ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங்கள் கொண்டு விளங்குவதாகவே கூறப்பட்டுள்ளது. சண்முகனுக்கு இருமருங்கிலும் ஜயை, விஜயை என்னும் இருதேவியர் விளங்குகின்றனர் என்று ஸ்ரீதத்வநிதி குறிப்பிடுகிறது.

படைவேல் பகழி வாள்திகிரி
பாசம் அபயம் வலத்திடத்துச்
சுடர்வார் குலிசம் சிலைதோல் புன்
தோட்டி வரதம் இவை பரித்த

**தடவான் கரமும் முகம் ஆறும்**
**தனிமா மயிலும் இருமாதர்**
**உடனும் எழிலும் தரும் ஆறு**
**முகவன் உருவம் உஞற்று நரும்**

—அகத்தியனருட்பெறுபடலம்: 72

என்று தணிகைப் புராணத்தில் ஆறுமுகப் பெருமான் வடிவ அமைப்பு காட்டப் பெற்றுள்ளது. சிறுவாபுரியில் சண்முகர் திருவுருவம் சிறப்பாக உள்ளது.

ஆறுமுகனை வழிபடுவோர் சிவனையும் சக்தியையும் ஒருங்கே வழிபட்ட பலனை அடைவார் என்று சாத்திரங்கள் கூறுகின்றன.

## 10. தாரகாரி (தாரகாந்தகர்)

சூரபன்மனின் இளையதம்பி தாரகாசுரன் மாயையில் வல்லவன். கிரவுஞ்சம் என்னும் தனது மலையுள் புகுமாறு செய்து முருகனின் நவவீரர்களுள் முதன்மையான வீரவாகு தேவர் முதலியோரை மயக்கமுறச் செய்தான். தனது ஞான வேலால் முருகவேள் தாரகனை அழித்து, மாயையை வென்று அருள்புரிந்த கோலமே தாரகாரி. 'குருகு பெயர்க் குன்றம் கொன்றோன் முருகன்' (குருகு—கிரௌஞ்சமலை)

குமாரதந்திரத்தில் இவ்வடிவம் ஆறுமுகம் பன்னிரு கரங்களும் கொண்டதாகக் காட்டப் பெற்றுள்ளது. அவரது வலக்கரம் ஒன்று அபயமாகவும் ஏனையகரங்களில் சக்தி, உலக்கை, வாள், சக்கரம், பாசம் முதலியன தரித்தும், இடக்கரம் ஒன்று வரத முத்திரையிலும், ஏனையகரங்களில் வஜ்ரம் (குலிசம்), வில், கேடயம், கொடி (வல்லி), அங்குசம் ஆகியவை தரித்தும் விளங்குகின்றார். விராலிமலையில் விளங்கும் பெருமான் தாரகாரி வடிவமே என்பது குறிப்பிடத்தக்கது. தணிகைப்

புராணம் காட்டும் தாரகாரி வடிவமும் குமாரதந்திர விளக்கத்தையே உறுதி செய்கிறது. இவ்வடிவ அமைப்பை செங்கல்பட்டு மாவட்டம் உத்தரமேரூர் கந்தபெருமான் ஆலயத்தில் காணலாம்.

வரதம் கொடி கேடகம் தோட்டி
வார்ந்த வெறுழ்ப்பா சங்குலிசம்
பரவும் அபயம் வாள் சூலம்
பரிதி முசலம் வேல் முந்நாற்
கரமும் விளங்க அறுமுகமும்
கதிர்ப்ப விழிகள் கருணைமழை
தரவென் றருளும் தாரகாந்
தகன்சீர் உருவம் சமைப்போரும்

—அகத்தியன் அருள் பெறுபடலம்; 73

ஸ்ரீதத்வநிதியில் தாரகாந்தகர் வடிவம் ஒரு முகமும் ஆறுகரங்களுடன் யானை மீது அமர்ந்த கோலமாகக் காட்டப் படுகிறது. ஆறுகரங்களும் முறையே கட்கம் (வாள்), சக்தி, கேடகம், அட்சமாலையுடன் அபய வரதமாக அமைந்துள்ளன. இம்மூர்த்தியை வழிபட்டு உலக மாயையிலிருந்து விடுபடலாம்.

## 11. சேனானி (சேனாபதி)

"வீரர்களுள் யான் சேனானியாகத் (முருகனாக) திகழ்கிறேன்' என்று கண்ணபிரான் கீதையில் கூறுகிறார். வீரர்களுள் பெருவீரன்—மாவீரன் முருகன். வீரம் பெற விரும்புவோர் முருகனை வழிபடுவர். மௌரியப் பேரரசில் கோட்டையில் சேனானியின் வடிவம் அமைத்த செய்தியை சாணக்கியரின் அர்த்த சாஸ்திரம் பேசுகின்றது.

சூரபதுமனை வெற்றி கொள்ள வேண்டி தேவர் படைகளுக்குத் தலைமை ஏற்றான் முருகன். சேனாதிபதி— சேனானியாகிய இத்திருக் கோலத்தில் குமரவேள் ஆறு முகமும் பன்னிருகரங்களும் கொண்டிருப்பதாகக் குமார தந்திரம் பேசுகிறது. வலக்கரங்கள் ஆறில் ஒன்று அபயமாகவும் ஏனையவை சக்தி, வாள், சூலம், சக்கரம், அங்குசம் முதலியன கொண்டு விளங்குகின்றன. இடக் கரங்களில் ஒன்று வரதமாகவும் ஏனையவை வஜ்ரம், தாமரைமலர், பாசம், தண்டாயுதம், கதை ஆகியவை கொண்டு திகழ்கின்றன. வானவர் தானைத்தலைவனான சேனானியின் கோலத்தை வடஆற்காடு மாவட்டம் தேவிகாபுரத்தில் பெரியநாயகிஅம்மன் கோயிலில் திகழும் ஆறுமுகப்பெருமான் வடிவில் காண்கிறோம்.

தணிகைப் புராணம் சேனானி வடிவினைக் கீழ்வரு மாறு காட்டுகின்றது. இதில் முசலம், அம்பு, வில், ஆகியவை குமார தந்திரத்திலிருந்து மாறுபட்டு உள்ளன.

அபயம் முசலம் வாள் சூலம்
    அயில்வேல் தோட்டி வலம்வரதம்
தபுதீர் குலிசம், சிலை பதுமம்
    தண்டம் கதை மற்றிடமாக
உபய விராறு கரதலமும்
    ஒளிர்வித் தாறு முகந் தோற்றிச்
சுபநன் கருளி யிடர் துமிக்கும்
    சேனாபதிசீர் தொகுப்போரும்.

—அகத்தியன் அருள் பெறுபடலம்: 74

பந்தயங்களிலும் போரிலும் வெற்றிபெற இம் மூர்த்தியை வழிபடுதல் அவசியம்.

## 12. பிரம்மசாஸ்தா

படைப்புத் தொழில் செய்யும் நான்முகன் (பிரமன்) கொண்ட செருக்கை அடக்கித் தானே பிரமனது படைப்புத் தொழிலை மேற்கொண்ட கோலமே பிரம்ம சாஸ்தா என அழைக்கப்படும். பிரம்ம சாஸ்தா என்பதற்குப் பிரமனைத் தண்டித்தவர் என்று பொருள்.

கந்தபுராணத்தில் முருகன் பிரமனைத் தண்டித்துப் படைப்புத் தொழிலை மேற்கொண்டது மிக நயமாகக் கூறப்படுகிறது.

ஒருகரம் தனில் கண்டிகை
வடம்பிரித்து ஒருதன்
கரதலம் தனில் குண்டிகை
தரித்து இருகரங்கள்
வரதமொடு அபயம் தரப்
பரம்பொருள் மகன் ஓர்
திருமுகம் கொடு சதுர்முகன்
போல் விதி செய்தான்.

குமாரதந்திரத்தில் இக்கோலம் ஒருமுகமும் நான்கு கரமும் கொண்டிருப்பார் என்றும், தனது பின் இரு கரங்களில் அட்சமாலை, கமண்டலம் கொண்டும் முன் இருகரங்கள் ஒன்று அபயமாகவும் மற்றொன்று இடுப்பிலும் கொண்டுள்ளார் என்றும் தெரிவிக்கிறது.

தொண்டை நாட்டில் பெரும்பாலான திருக்கோயில்களில் பிரம்ம சாஸ்தா வடிவினையே காண்கிறோம். காஞ்சிபுரம் குமர கோட்டத்தில் விளங்கும் முருகவேள் பிரம்ம சாஸ்தா வடிவுடனேயே திகழ்கிறார். 'சந்ததமும் அடியார்கள் சிந்தையது குடியான தண்சிறுவை தனில் மேவும் பெருமான் பிரம்ம சாஸ்தா வடிவமே.

ஒரு முகம் கொண்டு நான்முகன் தொழில் செய்த முருகனின் இக்கோலமே தணிகைப் புராணத்திலும் அழகாகக் காட்டப்படுகிறது.

வரத மணிக்குண் டிகைஇரண்டும்
வாமத் திருக்கைத் தலமாக்கிப்
பரவு புரியும் அபய மொடு
புரைதீர் அக்க வடம் வலப்பால்!
இரவை இரிக்கும் வலத்தமைத்திட்
டெல்லா உலகும் இனிதளித்துப்
பிரம சாத்தன் எனப் பொலிந்த
பெருமான் உருவம் பிறக்கு நரும்

—அகத்தியன் அருள் பெறுபடலம்: 75

சென்னையருகிலுள்ள வலசரவாக்கத்தில் விளங்கும் மாபெரும் பிரமசாஸ்தா வடிவம் குறிப்பிடத்தக்கது. இங்கு பீடத்துடன் சேர்ந்து சுமார் எட்டடி உயரத்தில் மிகவும் கம்பீரமாகக் காட்சியளிக்கும் கோலம் கண்டு இன்புறத்தக்கது. பூவிருந்தவல்லி அருகில் உள்ள வாயிலா நல்லூரிலும் சோழர் காலத்தைச் சார்ந்த மிகப் பெரிய பிரம்மசாஸ்தா வடிவம் உள்ளது.

செங்கற்பட்டு அருகிலுள்ள ஆனூரில் அமைந்த முருகன் கோயிலில் முருகன் முன் வலக்கையில் தாமரை மலரும் முன் இடக்கை இடுப்பிலும் பின் இருகரங்களில் அட்சமாலையும் கமண்டலமும் கொண்டு அருமையாகக் காட்சியளிக்கிறார். இவரை பாலசுவாமி யும் பிரமசாஸ்தாவும் இணைந்த கோலமான "பால பிரமசாஸ்தா" என்றழைக்கலாம்.

பிரம சாஸ்தா வடிவத்தை வழிபடுவோர் பிரம வித்தைகள் கைவரப்பெற்று சகலகலா வல்லவனாக, "புந்திநிறை அறிவாளனாகத்" திகழலாம்.

## 13. வள்ளி கல்யாண சுந்தரர்

முருகனது திருப் பெயர்களுள் "வள்ளிகணவன்" என்று போற்றும் திருப்பெயர் புகழ்மிக்கதாகும். தேவாதி தேவனுன தேவயானைநாயகன் மனித இனத்தின் குறவர் மடமகளை வேட்ட வரலாறு ஆழ்ந்த தத்துவச் சிறப்புடையது. குமரவேள் திருமுன் யாவரும் சமம் என்ற விளக்கம் வள்ளிநாயகன் வடிவத்தால் உணர்த்தப் பெறுகிறது. இச்சா சக்தி வடிவினளாக வள்ளி திகழ்கிருள். தமிழர் நாகரிக அம்சமாக வள்ளி திருக்கலியாணத்தைக் களவுமணம் என்று கூறுவது நயம் மிக உடையதாகும். உலகில் இல்வாழ்க்கை இனிது நடத்தற் பொருட்டே முருகன் வள்ளியம்மையை மணந்துகொண்டு அவளுடன் இனிதுறப்பேசி நகையமர்ந்தருள்கின்ருன் என்று ஞான நூல்கள் கூறும். இங்ஙனம் வள்ளியம்மையை மணந்து கொண்ட இனிய எழில் நிலையிலுள்ள முருகனே வள்ளிகல்யாண சுந்தரர் என்று அழைக்கப் பெறுகிருர்.

குமாரதந்திரம், வள்ளிகல்யாண சுந்தரமூர்த்தியின் வடிவத்தை ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்ட தாகக் காட்டுகிறது. பின் இருகரங்கள் அட்சமாலையும், கமண்டலமும் கொண்டு, முன் இருகரங்கள் அபயம், கட்யவலம்பிதம் (இடுப்பில்) அமைப்பிலும் காணப்படு கின்றன. வலப்புறம் வள்ளி இனிய காட்சியளிப்பாள். வள்ளிநாயகி முன்பிறவியில் திருமாலின் மகள் என்பதால் திருமால் தாரைவார்த்துக் கொடுக்க வள்ளியை முருகன் ஏற்று மணக்கும் கோலமாகத் திகழ்கிறது.

தணிகைப்புராணம் காட்டும் வள்ளி கல்யாண சுந்தரர் வடிவம் குமாரதந்திரத்தை ஒத்துள்ளது.

அல்யாப் பவிழ்க்கும் வலக்கரங்கள்
அபயம் அக்கவடந் தாங்க
வெல்யாப் புறுத்த மணிக்கடமும்
கடியும் இடக்கைத் தலஞ்சேரச்
சொல்யாழ் அனைய வள்ளி வலம்
துன்ன மணி நீர் அரி வாக்கக்
கல்யா ணத்தின் எழில் வாய்ந்த
கடவுள் உருவம் காண்போரும்

—அகத்தியன் அருள் பெறுபடலம்: 76

“சகல வேதமுமே தொழு சமரமாபுரி” என்று அருணகிரியார் போற்றும் திருப்போரூர் கந்தசாமிக் கோயிலில் உள்ள மண்டபத்தூணில் அமைந்துள்ள “வள்ளிகல்யாண சுந்தரர்” வடிவம் மிக அழகானது. கந்தன் வள்ளியைக் கைபிடித்துள்ள கவின்மிகு கோலம் காண அரிய ஒன்று.

குமாரக் கடவுளுக்கு கோழிக்கொடி, ஊது கொம்பு வேலாயுதம், மயில் வாகனம், மலை ஆட்சி ஆகியவை வள்ளிநாயகியின் சீதனமாக கிடைத்தனவாம் என்று அருணகிரியார் நயம்பட கந்தரந்தாதி எட்டாவது பாடலில் குறிப்பிடுகிறார்.

வள்ளி கல்யாண சுந்தரமூர்த்தியை வழிபட திருமணங்கள் உரிய காலத்தில் நடைபெறும். தடைபட்ட திருமணங்கள் தடைகள் நீங்கப் பெற்று இன்பமான மணவாழ்வுப்பேறு கிட்டும்.

## 14. பால சுவாமி

முருகனை அழகும் இளமையும் கொண்ட வடிவிலே பால சுவாமியாக, பால சுந்தரமாக, பால சுப்ரமணியனாக வழிபடுவதில் மகிழ்கிறோம். "என்றும் இளையாய், அழகியாய்" என்று முருகனைப் போற்று கிறது சங்கத்தமிழ்ப் பாடல். அன்புடன் முருகனை வழிபட்டால் இளமையும் அழகும் மற்றும் எல்லா நலன்களும் எய்தி இன்புறலாம்.

பால சுவாமி சுந்தரக் குழந்தையாக ஒரு முகமும் இருகரங்களும் கொண்டு திகழ்கிறார். வலக்கையில், தாமரை மலரும், இடக்கை இடுப்பில் (கட்யவலம் பிதம்) கொண்டுள்ள கோலத்தில், திருவடிகளில் தண்டையணிந்து கிண்கிணி சதங்கை ஒலிக்க காட்சி யளிக்கிறார்.

குமாரதந்திரத்தில் காட்டப்பெறும் இவ்வடிவத் தையே தணிகைப்புராணமும் எடுத்துரைக்கிறது.

கடியில் இடக்கைத் தல மிருவிக்
　　கமலம் வலக்கைத் தலமேந்தி
அடியின் மணிக்கிண் கிணிகலை இ
　　யமரும் பால உருத் தோற்றி
முடிகள் உரிஞ எதிர் வணங்கும்
　　முகுந்தன் முதலோர்க் கருள்சுரக்கும்
படியில் எழிற்சுப் பிரமணிய
　　பகவன் உருவம் பயிற்றுநரும்

—அகத்தியன் அருள் பெறுபடலம்: 77

சென்னை அருகே விளங்கும் போரூர் பாலமுருகன் திருக்கோயிலில் திகழும் பாலசுவாமி சமீபகாலத்தில் பூமிக்குள்ளிருந்து வெளிப்பட்டவர். இம்மூர்த்தி

வலக்கையில் சக்தி ஆயுதமும் இடக்கையில் நீலோற்பல மலரும் கொண்டு கரண்டமகுடந்தாங்கி அழகாக விளங்குகிருர். இம்மூர்த்தி ஞானசக்திதரனும் பால சுவாமியும் இணைந்த கோலமாகத் திகழ்வதால் இவரை "ஞானசக்தி பாலன்" என்றழைக்கலாம்.

"த்விபுஜாம் சாருவதனும் நேத்ரத்ரய சமங்விதாம்
கரண்ட மகுடா பேதாம் ச்யாமனிலாளகான் விதாம்
தக்ஷிண ஹஸ்தே வஜ்ரஞ்ச வாம ஹஸ்தே
நீலோத்பல ஸகந்த நாமமி மீடே."

என அம்மூர்த்தியின் தியான ஸ்லோகம் அமைந்துள்ளது. திருவையாறு அருகில் உள்ள திருக்கண்டியூரில் அமைந்துள்ள முருகனது வடிவங்களில் ஒன்று போரூரில் உள்ளதுபோல் வலக்கையில் சக்தியும் இடக்கையில் மலரும் கொண்டு அமைந்துள்ளது. இவர், 'வீரஸ்கந்தர்' என்றவாறு அழைக்கப் பெறுகிருர்.

செங்கற்பட்டு மாவட்டம் பொன்னேரி அருகில் (சிறுவாபுரி அருகில்) உள்ள ஆண்டார்குப்பம் என்னும் தலத்தில் உள்ள பாலசுப்ரமண்யர் அமைப்பு மிகவும் சிறப்பான வடிவமாகும். இருகரங்களும் இடுப்பில் வைத்து நின்றகோலத்தில் காட்சியளிக்கும் இந்த இணையிலா வடிவத்தை "தச்சூர் வடக்காகு மார்க்கத் தமர்ந்த பெருமான்" என்று அருணகிரிநாதர் போற்றுகிருர். அதாவது தற்போதுள்ள ஆண்டார் குப்பம் செல்லும் வழியில் உள்ள தச்சூர் என்ற ஊருக்கு வடப்புறம் இக்கோயில் அமைந்துள்ளது. ஒருகாலத்தில் தச்சூரும் தற்போதைய ஆண்டார் குப்பமும் ஒரே ஊராக தச்சூர் என்ற பெயரில்

அமைந்து, ஊரின் வடக்கு திசையில் கோயில் அமைந்திருந்ததால் அருணகிரியார் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் என்று நாம் அறிய முடிகிறது. இங்குள்ள பால சுவாமி வேறு எங்கும் காண இயலாத வடிவமைப்பாகும். இக்கோயில் சிறப்பாக பராமரிக்கப்படுகிறது. இத்தலத்திற்கு அருகில்தான் அருணகிரியார் போற்றிய சிறுவாபுரி (தற்போது சின்னம்பேடு என்றழைக்கப்படுகிறது) தலம் சிறப்பாக அமைந்துள்ளது.

திருச்செந்தூரில் விளங்கும் பாலசுப்ரமண்யர் திருவுருவம் மிகவும் சிறப்புடையது. ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு திகழ்கிருர்.

பாலசுவாமியை வழிபட உடற்குறைகள் நீங்கி அழகான உடல் அமைப்பும், வனப்பும், தேக சௌக்யமும் ஏற்படும்.

## 15. கிரௌஞ்ச பேதனர்

கிரௌஞ்சம்—அன்றிற்பறவை. அதன் வடிவாகிய மாயமலையாகத் திகழ்ந்த தாரகாசுரனை அழித்த வடிவம் இது.

**.................. .................குன்றின்**
**நெஞ்சுபக எறிந்த அம்சுடர் நெடுவேல்**
**சேவலங் கொடியோன் காப்ப**
**ஏமவைகல் எய்தின்ருல் உலகே**

என்று குறுந்தொகை கடவுள்வாழ்த்து முருகனைப் போற்றுகிறது. 'குருகுபெயரிய வரை தொளைபட விடு சுடர் வேலா' என்று அருணகிரியார் அழைப்பார்.

கிரௌஞ்ச பேத மூர்த்தியைக் குமார தந்திரம் ஆறுமுகமும் எட்டுக் கரங்களும் கொண்டவராகக்

காட்டும். வலக்கரங்களில் ஒன்று அபயகரமாகவும் ஏனையவை சக்திவேல், வாள், அம்பு, ஆகியவை ஏந்தியும், இடக்கரங்களில் ஒன்று வரத முத்திரையாக வும் மற்றவை வஜ்ரசக்தி, கேடயம், வில் ஆகியவை ஏந்தியும் காணப்படுகிறது.

தணிகைப் புராணமும் இவ்வாறே இந்த அமைப்பைக் காட்டுகின்றது.

அழலு நெடுவேல் வாள்பகழி
அபயம் வலநாற் கரத்தமைத்துத்
தழல் வச் சிரங்கே டகம் வரதம்
சாபம் இடநாற் கரந்தாக்கி
எழில்மிக் கொழுகும் முகம் ஆறும்
இலங்கத் தோற்றிக் கிரவுஞ்சம்
புழைபட் டழியப் படைவிடுத்த
புத்தேள் உருவம் பொறிப்போரும்

—அகத்தியன் அருள் பெறுபடலம்; 78

ஸ்ரீ தத்வநிதியில் இக்கோலம் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டதாகக் காணப்படுகின்றது. இவ்வடிவில் கரங்கள் முறையே அபயம், வரதமாகவும், மலரம்பு, கரும்புவில் தாங்கியும் உள்ளன. அருகே மயில் நிற்கின்றது. மற்றொரு வகையில் தேவர்களைக் காத்தருளும் முயற்சியுடன் மயில்வாகனத்தில் அமர்ந்து இருகைகளிலும் வேல்கொண்டு கிரௌஞ்ச மலையைத் துளைக்கும் தோற்றமுடன் விளங்கு கிறார். இவ்வமைப்பை நான்குநேரி அருகிலுள்ள திருக்குறுங்குடி திருமால் கோயிலிலும் மயிலாடு துறைக் கருகிலுள்ள புஞ்சை (திருநனிபள்ளி) கோயி லிலும், கண்டு வணங்கலாம்.

மனத்தில் சஞ்சலங்கள், துன்பங்கள் நீங்கவும் இடர்களை வெல்லவும் இம்மூர்த்தியை வழிபட வேண்டும்.

## 16. சிகிவாகனர் (மயிலூர்திப் பெருமான்)

மயில்மீது வந்து நமது மையல் நீக்கி அருளும் மாமுருகன் திருக்கோலமே சிகிவாகனர் என்றழைக்கப் படுகிறது. மயில் முருகனுக்கு ஊர்தியாகவும் கொடியாகவும் அமைந்துள்ளது. இவ்வடிவில் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு விளங்குகிறார். சக்திவேலும், வஜ்ரசக்தியும் இருகரங்களில் கொண்டும் அபய, வரதமாக இருகரங்களைக் கொண்டும் மயில் மீது அமர்ந்து திகழ்கிறார். குமாரதந்திரம் இவ்வடிவை ஆறுவிதமாகக் காட்டுகிறது. தமிழ்நாட்டில் பெரும் பாலும் கோயில்களில் உற்சவ மூர்த்தி வடிவம் இவ்வமைப்பிலேயே உள்ளன.

இவ்வடிவச் சிறப்பைத் தணிகை புராணமும் பாங்குறக் காட்டுகிறது.

புலிங்கங் கதிப்பத் தீத்தும் மும்
　　பொருவேல் அபயம் வலத்திருகைத்
தலங்கொண் டிடப்பால் இருகரத்தும்
　　தக்க வரதம் வச்சிரமும்
இலங்க அணிந்து திரைக்கடலும்
　　எழுபல் வரையும் உலகனைத்தும்
குலுங்கக் கடவு மயிலூர்திக்
　　கோமான் உருவம் இயற்று நரும்

—அகத்தியன் அருள்பெறு படலம்: 79

மயிலூர்த்திப் பெருமானை மறவாமல் வணங்கு வோர் இச்சையில் உற்ற அனைத்தையும் பெற்று இன்பவாழ்வு பெறுவர்.

## 17. ஞான சத்தி சுப்ரமண்யர்

இவ்வடிவத்தில் முருகவேள் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு திகழ்கிறார். அவரது கரங்களில் ஒன்று அபய முத்திரையாகவும் ஏனையவை சக்தி, குக்குடம் (கோழி), வஜ்ரம் ஆகியவை தாங்கியும் உள்ளன. ஜடாமகுடத்துடன் கடப்ப மாலையை அணிந்து இவர் காட்சியளிக்கிறார் என்கிறது ஸ்ரீதத்வ நிதி.

சோழர்களின் கலைப்பாணியில் திருச்சி மாவட்டம் பழுவூரில் ஞானசக்தி சுப்ரமண்யர் வடிவினைக் காணலாம். ஞானசக்தி சுப்ரமண்ய மூர்த்தியை வழிபட எடுத்தகாரியம் யாவிலும் வெற்றி கிட்டும்.

## 18. அக்னி ஞாதா சுப்ரமணியர்

ஒருமுகம் மந்திரவிதியின் மரபுளி வழாஅ அந்தணர் வேள்வி ஓர்க்குமமே'' என்று திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் போற்றியவாறு தெய்வீக யாகாக்னியை வளர்ப்பதற்கு, அக்னியைப் போன்று இரண்டு முகங்களும் எட்டு கரங்களும் கொண்டு முருகன் விளங்கும் திருக்கோலமே அக்னி ஞாதா சுப்ரமணியர் எனும் வடிவமாகும். தமது கரங்களில் வஜ்ரம், குக்குடம், கேடகம், ஆஜ்ய (நெய்) பாத்திரம், சுருவம் (யாகத்தீயில் நெய்யிடுவதற்குப் பயன்படுவது) அட்சமாலை, கத்தி, ஸ்வஸ்திகம் (பகைவர்மேல் சுழற்றி எறியப்படும் ஒரு ஆயுதம்) ஆகியவை கொண்டு, அமர்ந்திருந்து வேள்வி (யாகம்) செய்யும் கோலமாக ஸ்ரீதத்வநிதி காட்டுகிறது.

இத்தகைய அற்புதமான வடிவமைப்பை நின்ற கோலத்தில் சென்னிமலை முருகன் கோயிலில் கண்டு

இன்புறலாம். வேறு எங்கும் காண இயலாத வடிவமைப்பு இது. இம் மூர்த்தியை வழிபட வேள்வி செய்த பயன் கிட்டும்.

## 19. சௌரபேய சுப்ரமணியர்

ஸ்ரீதத்வநிதியில் குறிக்கப்பெறும் இத்திருவுருவம் நான்கு முகங்களும் எட்டு திருக்கரங்களும் கொண்டு விளங்குகிறது. இவ்வடிவில் முருகன் வலக்கால் பூமியிலும் இடக்கால் சிறிது வளைந்தும் விளங்குவார். வலது கரங்களில் என்று அபயமாகவும் ஏனையவை களில் சக்தி, தாமரைமலர், மலரம்பு, ஆகியவையும் இடக்கரங்களில் ஒன்று வரதமாகவும் ஏனையவை வஜ்ரம், கரும்புவில், சூலம், ஆகியவை ஏந்தியும் உள்ளன. சென்னிமலையில் அற்புதமான சௌரபேயர் வடிவம் காணக் கிடைக்கின்றது. வேறு எங்கும் காண இயலாத அரிய வடிவம் இது.

## 20. காங்கேய சுப்பிரமணியர்

கங்கையின் மைந்தனுதால் காங்கேயன் என்றழைக்கப்பெறும் முருகன் இவ்வடிவத்தில் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு திகழ்கிறுர். கரங்களில் கோழிக் கொடி, அரணிக்கட்டை, பரசு (கோடரி), பூரணகும்பம் ஆகியவை ஏந்தியுள்ளார். தலையில் கரண்டமகுடம் தரித்து நீலோத்பல மாலை அணிந்து மகர (மீன்) வாகனத்தின் மீது காட்சியளிக் கிறுர். இவர் தங்கவண்ணம் உடையவர். இவ்வடி வத்தை ஸ்ரீதத்வநிதி குறிப்பிடுகிறது. சிவானந்தப் பேறுபெற இம்மூர்த்தியை வழிபடவேண்டும்.

A. No. 25548



## 21. குகசுப்பிரமணியர்

தன்னை வழிபடும் அடியார்களின் இதயகுகையில் விளங்குபவன் முருகன். குகன் என்னும் பெயர்ச் சிறப்பினை முன்னரே காட்டியுள்ளோம். இவ்வடிவில் குகர் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு திகழ்கிறார். தமது இருகரங்களில் வஜ்ரம், சூலம் கொண்டும் மற்ற இருகரங்கள் அபய, வரதமாக, இரத்னகிரீடம் அணிந்து இடதுபுறம் தேவியுடன் கல்யாண கோலத்தில் வெள்ளை ஆடை உடுத்தி விளங்குகிறார் என்று ஸ்ரீ தத்வநிதி விளக்குகிறது. தகராகாச வித்தை பெற இம்மூர்த்தியை வழிபட வேண்டும்.

## 22. பிரமசாரி

பிரமசாரி திருவுருவில் விளங்கும் முருகவேள் ஒருமுகமும் இருகரங்களும் கொண்டு திகழ்கிறார். தமது வலக்கையில் தண்டாயுதமும், இடக்கையில் வஜ்ரமும் உடையவர். தலையில் குடுமியும், மார்பில பூணூலும், இடையில் முஞ்சிப் புல்லாலான அரை ஞாணும் உடையவர். இவர் தாமரைமலர் மீது நிற்கிறார். செந்நிறம் கொண்ட செவ்வேளாகக் காட்சியளிப்பார் என்று ஸ்ரீதத்வநிதி குறிப்பிடுகிறது.

## 23. தேசிக சுப்பிரமணியர்

சிவகுருவாகத் திகழ்கிறார் சின்மயானந்த வடிவனராகிய சுப்பிரமணியர். கல்லாலின்கீழ் அமர்ந்து சனகாதி நால்வருக்கும் மோன உபதேசம் செய்த ஜகத்குருவாகிய சிவபெருமானுக்கே உபதேசம் செய்தவர் நம் முருகவேள். ஞான தேசிகன் அவர். ஒரு முகமும் ஆறு கரங்களும் கொண்ட தேசிக சுப்பிரமணியர் தனது இருகரங்களில் சக்தியும் ஏனைய



இரண்யாசுர சம்ஹார மூர்த்தி
திருவிடைக்கழி (பக்கம்-66)



வில்லேந்திய வேலன்
வில்லுடையான்பட்டு (நெய்வேலி) (பக்கம்-68)



அஜாரூடர்
(ஆட்டு வாகனத்தில்)
திருப்போரூர் (பக்கம்-70)



தேவசேனைத் திருமணம்
திருபரங்குன்றம் (பக்கம்-81)



அமிர்தகர சுப்ரமணியர்
(ஒருமுகம்-ஆறு கரங்கள்) ஸ்ரீ அமிர்தகடேச்வரர்
திருக்கோயில்-கோடிக்கரை (பக்கம்-70)



லட்சண குமாரன்

குமாரர் கோயில் (நாகர் கோயில் அருகில்) (பக்கம்-78)



ஐந்துமுக சிவகுமாரன்-ஓதிமலை

ஐந்துமுகங்கள்–எட்டு கரங்கள் (பக்கம்-79)



சூர்மா தடிந்த சுடர்வேலோன்
(சிதம்பரம் மேலக் கோபுரவாயில் சிற்பம்) (பக்கம்-80)



கும்பமுனி கும்பிடும் தம்பிரான்
திருப்போரூர் கந்தசுவாமி திருக்கோயில்
(பக்கம்-81)



வள்ளியை வேட்டவன்

ஆலம்பூர் அருங்காட்சியகம்-(ஹைதராபாத்)

(பக்கம்-82)

கரங்களில் அட்சமாலை, வரதம், அபயம், சின்முத்திரை யும் கொண்டு எதிரில் சிவபிரான் மாணவராக நிற்க அவருக்கு பிரணவ உபதேசம் செய்வார். மானசாரம் என்னும் நூலில் தேசிக சுப்பிரமணியர் திருவுருவம் வேறுவிதமாகக் காட்டப்படுகிறது. முருகவேளுக்கு எதிரே சிவபெருமான் இடக்கையை மார்போடு அணைத்து வலக்கையால் வாயைப் புதைத்து, ஏனைய இருகரங்களில் உடுக்கையும் மானும் விளங்க, தலையில் பிறைச்சந்திரன் பொலிய, நிறைமதி போன்ற நிறத் துடன் நின்று இடப்பாகத்தில் பார்வதி தேவி நிற்க உபதேசம் பெற்றுக் கொள்கிறார்.

திருப்போரூர் திருக்கோயிலில் இத்திருவுருவம் செப்புத்திருமேனியில் அற்புதமாக உள்ளது.

முருகவேள் அகத்தியருக்கு உபதேசித்தார் (திருப்புகழ்— திட்டெனப்பல); பிரம்மா, விஷ்ணு, இந்திரன் மூவருக்கும் போதித்தார். (திருப்புகழ்— முலைகுலுக்கிகள்); சப்தரிஷிகளுக்கும் அவர் உபதேசம் அருளினார். (திருப்புகழ்-4); சனகாதி நால்வருக்கும் உபதேசித்தவர் அவரே (முலைகுலுக்கி கள்—திருப்புகழ்)

அருணகிரிநாதர், முருகனைப் "பரம தேசிகர்" என்றும் (திருப்புகழ் 374, 1107) "யோகா சிவஞானொப தேசிகனே" (கந்தரநுபூதி) என்றும், பிரமன் அறியா விரத தட்சிணாமூர்த்தி" (திருப்புகழ்—8-7) என்றும் போற்றி மகிழ்கிறார். இம்மூர்த்தியை வழிபட சிவஞானம் பெருகும்.

## 24. வில்லேந்திய வேலன்

இராமாவதாரத்தில் இராமபிரானுடைய பெருமைக்கு அணி சேர்ப்பது "கோதண்டம்" எனும்

வில். மாமனைப் போல் மருமகனுக்கும் "கோதண்டம்" சிறப்பான ஆயுதமாகத் திகழ்கிறது. அக்கோதண்டம் சாதாரணமானதல்ல. எதிரிகளை கோபத்தோடு சென்று அழிக்க வல்லது. எனவே அதனை "வெங்கோப கோதண்டம்" என்று அருணகிரிநாதர் குறிப்பிடுவார்.

"சூலம், வாள், தண்டு, செஞ் சேவல், கோ தண்டமும்
சூடு தோளுந்தடந் திருமார்பும்
தூயதாள் தண்டையும் காண ஆர் வஞ்செயும்
தோகை மேல் கொண்டுமுன் வரவேணும்"

என்று திருச்செந்தூர் திருப்புகழில் அழைப்பார்.

வில்லேந்திய வடிவில் அமைந்துள்ள முருகனை "சம்ஹார மூர்த்தி" என்று அழைப்பார்கள். சூரபத்மனின் மகன் இரண்யாசுரனை அழிப்பதற்கு முருகன் கொண்ட கோலத்தை "இரண்யாசுர சம்ஹார மூர்த்தி" என்று அழைக்கிறார்கள். இவ்வடிவை சேந்தனாரின் திருவிசைப்பா பெற்ற திருவிடைக்கழி எனும் ஒப்பற்ற முருகன் தலத்தில் கண்டு இன்புறலாம். சம்ஹார மூர்த்தி சிலதலங்களில் வள்ளி தேவசேனை சமேதராகவும், சில தலங்களில் தனித்தும் காணப் பெறுகிறார்.

பஞ்சலோகப் படிமங்களில் அமைந்துள்ள வில்லேந்திய கோலம் பெரும்பாலும் வலது காலை மயில் மீது வைத்த நிலையிலும் வலது முன் கையில் அம்பும், இடது முன் கையில் வில்லும் கொண்டு, பின் இரு கரங்களில் சக்தியும், வஜ்ரமும் கொண்டு விளங்குகிறது. இம்மாதிரியான வடிவங்களைத் திருப்போரூர், திருவேற்காடு, சேயூர், சிவபுரம், ஸ்ரீமுஷ்ணம், போன்ற தலங்களில் காணலாம்.

பூம்புகார் அருகில் உள்ள சாயாவனம் என்ற தேவாரத்தலத்தில் அமைந்துள்ள வில்லேந்திய வடிவம் வரலாற்றுச் சிறப்புடையது. அந்த செப்புத் திருமேனியின் கீழே ‘‘திருச்செந்திலாண்டவன்’’ என்று பொறிக்கப் பெற்றுள்ளதைக் காணும்போது அது திருச்செந்தூர் கோயிலைச் சார்ந்தது என்றும் சில நூற்றாண்டுகளுக்கு முன் வெளி நாட்டினரால் கொள்ளையடிக்கப்பட்டு கப்பலில் ஏற்றியபோது கப்பல் புயலில் சிக்கித் தடுமாறவே கொள்ளைக்காரர்கள் செய்வதறியாது அதனைக் காவிரிப் பூம்பட்டினத்துக் கடற்கரையில் போட்டதாகவும், அதனைச் சாயாவனத்து மக்கள் தமது ஊரிலுள்ள கோயிலில் வழிபாட்டில் வைத்துக் கொண்டதாகவும் அறிய முடிகிறது. அவனது திருவுருவ அழகைத்தான் கொஞ்சம் பார்த்து ரசிப்போமே !

‘‘மூன்றடி உயரத்தில் கோதண்டம் ஏந்திய கையனாய்க் காட்சி கொடுப்பார். வில்லுக்கு ஏற்ற அம்பு ஒரு திருக்கரமும் சக்திவேல் ஏந்திய ஒரு திருக்கரமும் அந்த உருவை, அழகு செய்யும். உயர்ந்து நீண்ட வேல் ஒன்றையும் ஏந்துவதற்காக அவன் அளவிடற்கரிய எழிலோடு இடையினை வளைத்து தலையினைச் சரய்த்து நிற்கும் நிலை, அவன் கலை உரைக்கும் கற்பனையை எல்லாம் கடந்து நிற்பவன் என்பதைக் காட்டும். தலையில் உயர்ந்து நீண்டு கம்பீரமாக இருக்கும் கிரீடம்; கழுத்தை அலங்கரிக்கும் அணிகொள் முத்தாரம்; தோளில் புரளும் வாகுவலயம்; மார்பிலே இலங்கும் யக்ஞோபவீதம்; இடையிலே இருக்கும் கச்சை; காலிலே கிடக்கும் கழல்; எல்லாம் மூர்த்தியின் கம்பீர்யத்தையும் வீரத்தையும் பறைசாற்றும். இந்த வில்லேந்திய வீரனின் உதடுகளில் தவழும் புன்னகையோ உங்களை

அடிமை கொள்ளும். இந்த மூர்த்தியை—வில்லேந்திய வேலனைக் காண்பதற்காகவே சாயாவனத்திற்குப் போய் வரலாம்.'' என்று அவனது ரூபலாவண்யத்தை ரசிப்பார் அமரர் தொ. மு. பாஸ்கர தொண்டைமான் அவர்கள்.

இத்தலத்திற்கு அருகில் உள்ள பல்லவனீச்சரம் கோயிலில் உள்ள கவுரியுடன் அமர்ந்த கந்தனையும் தரிசிக்க மறந்து விடக்கூடாது.

மூலஸ்தானத்தில் வில்லேந்திய வடிவத்துடன் வள்ளி, தேவசேனையுடன் கூடிய அமைப்பை திருவையாறு கோயிலில் காணலாம். இவரை தனுசு சுப்ரமணியர் என்பர். இதைப்போல தேவியர் இருவருடன் வில்லேந்திய வடிவத்தில் மூலமூர்த்தி—சிவலிங்க வடிவம் போல் அதிசயக் காட்சியளிக்கும் தலம் நெய்வேலி நகரில் உள்ள ''வில்லுடையான் பட்டு'' என்ற திருக்கோயிலாகும். ஒரு காலத்தில் அத்திப்பட்டு என்றழைக்கப்பட்ட இப்பகுதியில் கோயில் அமைந்திருந்தது என்பதை அருணகிரி நாதரின் அத்திப்பட்டு திருப்புகழ் உணர்த்துகிறது. முருகன் வில்லுடையவனாக அத்திப்பட்டில் இருப்பதால் தற்காலத்தில் 'வில்லுடையான்பட்டு' என்று ஊர் பெயர் மருவி வந்துள்ளது.

திருவண்ணாமலை கோயிலில் ஒருமுகம் ஆறு கரங்களுடன் கூடிய அற்புத முருகனை வில்லேந்திய கோலத்தில் காணும் போது இவன் ''கோதண்ட ராமனோ? என ஐயம் எழும்

**''ஆதி ரகுராம ஐய மாலின்மருகா பெரிய**
**ஆதி அருணாபுரியில் உறைவோனே''**

என்று அருணகிரியார் அழைப்பார். கும்பகோணத்தை அடுத்த பட்டீச்வரம் ஸ்ரீ தேனுபுரிச்வரர் கோயிலின் தூணில் உள்ள வில்லேந்திய வடிவம் மிகமிக அருமையான அமைப்பாகும். இடது கால் மயில்மேல் கொண்டு கோதண்டம் ஏந்திய கம்பீர வடிவம். வள்ளியும் தேவயானையும் இணைந்து நிற்கும் எழிற்கோலம் தூணின் மறுபுறம் மிகவும் அழகாயுள்ளது.

## 25. முருகவேடன்

முருகவேள் வள்ளி நாச்சியாரை ஆட்கொண்டு திருமணம் புரிந்து கொள்ள வேண்டி வேடனாக வந்தார். பக்குவ ஆன்மாவினை ஆட்கொள்ளப் பரமன் கொண்ட கருணை வடிவம் இது. சுவாமிமலை சுவாமி நாத சுவாமி திருக்கோயிலில் பங்குனி மாதத்தில் நடைபெறும் "வேடரூபக்காட்சி" என்னும் திருவிழா மிகவும் பிரபலமானது. சுவாமிமலை அருகில் உள்ள திருவலஞ்சுழி கோயிலில் வள்ளி, தினைப்புனம் காப்பதும் குமரன், வேடனாகவும், வேங்கை மரமாகவும், விருத்தனாகவும் காட்சியளிப்பதும், அரிசில் ஆற்றில் வள்ளியை யானை விரட்டி முருகனை மணக்க இணங்கச் சொல்வதும் கண்கொள்ளாக் காட்சியாகும். சுவாமிமலைக் கோயிலில் முருக வேடன் உற்சவமூர்த்தம் அற்புதமாகத் திகழ்கிறது. சேலம் மாவட்டம் கொல்லி மலைக்கருகில் உள்ள கூகைமலையில் பேளுகுரிச்சி ஸ்ரீ பழநியாண்டவர் கோயில் மூல மூர்த்தி வேட வடிவமே. தலையில் கொண்டையும் வலக்கையில் வேலும் கொண்டு மிக அழகாக உள்ளது.

## 26. ஆட்டுவாகனர்

அஜாரூடர் என்று போற்றப் பெறும் இக்கோலம் முருகன் ஆட்டுவாகனத்தில் காட்சியளிப்பதாகும்.

நாரதர் வேள்வியில் எழுந்த ஆடு, வடவாக்கினி போலக் கொதித்தெழுந்தது. தேவர்கள் வேண்ட முருகன் வீர வாகுவை அனுப்பி அதனைப்பிடித்து வரச்செய்து அதன்மேல் ஏறி அமர்ந்தார்.

**"நெருப்பிலுத் தங்கட் புவனம் அனைத்தும் அழித்துலவும்**
**செங்கட் கிடாயதனைச் சென்று கொணர்ந்(து)**
**எங்கோன் விடுக்குதி என்றுய்ப்ப அதன் மீதிவர்ந்து**
**எண்திக்கு நடத்தி விளையாடு நாதா**

(கந்தர்கலி வெண்பா)

கந்தபுராணத்தில் கூறப்பெறும் இச்செய்தியை "தகரேறங்கார் அஜ மேவியகுக" (திருவாலங்காடு திருப்புகழ்) என்று அருணகிரியாரும் போற்றுவார். வேறு எங்கும் காண இயலாத இவ்வடிவை திருப் போரூர் கந்தசாமிக் கோயிலில் கண்டு வணங்கலாம். சிக்கல், திருச்செந்தூர் திருக்கோயில்களில் கந்தர் சஷ்டிப் பெருவிழாவில் ஆட்டுவாகனத்தில் முருகவேள் பவனி வருவதைக் காணலாம்.

## 27. அமிர்தகர சுப்பிரமணியன்

தன்னை நாடிவரும் அடியார்களுக்கு அருளமுதை வழங்க கையில் அமுத கலசத்தை ஏந்தியிருக்கும் அற்புதக் கோலத்தை எங்கேயாவது காணமுடியுமா? முடியும்! கோடிக்கரை குழகர் கோயிலில்தான்! தஞ்சை மாவட்டத்தில் வேதாரண்யத்தை அடுத்த கோடிக்கரை யில் உள்ள குழகர் கோயிலில் ஒரு முகம் ஆறு கரங் களுடன் மிகப்பெரிய திருமேனியுடன் மயில்மீது அமர்ந்து இருபுறம் தேவியர்புடைசூழ காட்சி தருகிறார். ஒரு வலக்கரம் அபயமாகவும், ஒரு இடக் கரம் அமுதகலசம் ஏந்தியிருக்க ஏனைய கரங்களில் முறையே சக்திவேல், நீலோத்பலம், வஜ்ரம், தாமரை

மலர் ஆகியவை ஏந்தியிருக்கும் எழில் வடிவம். நீலோத்பல மலரும், தாமரை மலரும், அமிர்த கலசமும் குழகர் கோயில் முருகன் கரங்களில்தான் காணமுடியும். சம்சார சாகரத்தில் சிக்கித் தவிக்கும் மனிதனை கரை சேர்க்க (கோடிக்) கரையில் காத்திருக்கிறன் கருணை வள்ளல். அவனிடம் போய் அமுத கலசத்திலுள்ள ஞானத் தேனமுதைப் பெறலாம் வாருங்களேன்!

"குழகர் கோடிநகர் மேவிவளர் பெருமாளே
காதலுடன் ஓதும் அடியார்களுடன் நாடி
ஒருகால்முருகவேள் எனவும் அருள்தாராய்"

## 28. யோகாசாரிய மூர்த்தி

பிங்கலர் முதலிய முனிவர்கள் சித்திகளை அடையும் உபாயம் யாதென்று அறியாமல் வருந்தியபோது, நாரதர் குமாரக் கடவுளே யோக இயல்பு உணர்த்துபவர் என அறிவித்தார். முனிவர்களும் அவ்வாறே முருகனை வழிபட்டு யோக உண்மைகள் பலவற்றையும் அறிந்தனர். எனவே யோகிகளால் போற்றப்பெறும் ஆசிரியராக முருகவேள் திகழ்கிறர். இவ்வடிவத்தில் தேவியர் அவருடைய அருகில் இருப்பதில்லை. இருகரங்களுடன் தவமுனிவராக அலங்கரிக்கப்பெற்று முருகவேள் விழாக் காலங்களிலும் சிறப்பு வழிபாடுகளிலும் வணங்கப் பெறுகிறர்.

"யோகமதே ஊரும்மத்தா"

எனவும் "பரயோக" எனவும் அருணகிரி நாதர் போற்றுகிறர்.

## 29. வராஹ உன்மத்த பங்க மூர்த்தி

அருணகிரிநாதர் இவ்வடிவத்தைக் குறித்துப் பேசுகிறர். திருமால் வராஹ அவதாரம் எடுத்து

ஹிரண்யாக்ஷன் என்ற அசுரனிடமிருந்து இப் பூவுலகைக் காத்தருளினர். ஆனால் அசுரனை அழித்த வுடன் அவ்வராஹம் உலகையே அழிக்கத் தொடங் கியது. தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டு வராஹத்தின் உக்ரத்தைத் தணிக்க வேண்டினர். உடனே சிவபெருமான் முருகனை அழைத்து வரா ஹத்தை அடக்கப் பணித்தார். முருகவேள் வரா ஹத்தை அடக்கி, வராஹ உன்மத்த பங்க மூர்த்தி என்று பெயர் கொண்டார். இவ்வடிவம் எவ்வாறு இருக்க வேண்டும் என்பது குறித்து ஆகம நூல்களில் குறிப்பு ஏதும் இல்லை.

"ஏனபதிதனை கோலாகலமாக அமர்செய்த வடி வேலா" என்கிறார், அருணகிரிநாதர். ('காவிப்பூவை'— திருவானைக்கா)

சிவரகசிய காண்டம்—யுத்த காண்டத்திலும் சுப்பிரமணிய பராக்ரமம் என்ற நூலிலும் இவ்வடிவம் பேசப்படுகிறது.

## 30. விசுவரூப மூர்த்தி

வடிவேற் பெருமான் போர்க்களத்தில் சூரபது மனுக்குத் தனது விசுவரூப வடிவினைக் காட்டி யருளினர் என்று கந்தபுராணம் பேசுகிறது. அருணகிரிநாதரும் முருகவேளின் விசுவரூப வடிவினைப் போற்றுகிறார். எல்லாமாக விளங்கும் அவரிடத்தில் எல்லாம் உள்ளன. அவரது வடிவோ முடிவற்றது.

"பொன்கிரி என அம்சிறந்து எங்கினும் வளர்ந்து" (திருப்புகழ்—16) அப்பெருமான் "சகல வடிவாய்" விளங்குகிறார் (திருப்புகழ்—542) "முடிவிலாத் திருவடிவாய்" அவர் திகழ்கிறார் (திருப்புகழ்-1060).

## 31. சகலகலா வல்லப மூர்த்தி

முருகவேள் சகலகலா வல்லப மூர்த்தி என அருணகிரிநாதரால் போற்றப் பெறுகிறார். முன்னொரு காலத்தில் தேவர்களும், ரிஷிகளும், அறிஞர்களும் கூடிய சபையில் யாருக்கு "வித்வத் தாம்பூலம்" கொடுப்பது என்ற சர்ச்சை எழுந்தது. மிகச் சிறந்த அறிஞருக்கே அதனைக் கொடுக்க வேண்டும். அந்த சபையில் இருந்த தமிழ் மூதாட்டி ஔவையாருக்கே அதனைக் கொடுப்பதென எல்லோரும் தீர்மானித்தனர். ஆனால் ஔவையார் அதனை ஏற்க மறுத்துவிட்டார். "இந்திரன் ஒருவனே வித்வத் தாம்பூலம் பெறத் தகுதியுடையவன், ஏனெனில் ஐந்தரவியாகரணம் என்னும் நூலினை இயற்றியவன் அவனே" என்று ஔவையார் கூறினார். இந்திரனிடம் தாம்பூலம் கொடுக்கப்பட்ட போது, அவன் அதனை ஏற்க மறுத்து, அகத்தியருக்கே அது கொடுக்கப்பட்ட வேண்டும் ஏனெனில் தான் அவரிடமிருந்தே தமிழ் அறிந்ததாகக் கூறினான். அகத்தியரிடம் தாம்பூலம் கொடுக்கப்பட்ட போது அவர் அதை ஏற்க மறுத்து, கலைகளுக்கெல்லாம் இறைவியாகிய சரஸ்வதிதேவியே அதற்கு தகுதியுடையவள் என ஒதுங்கிவிட்டார். சரஸ்வதியும் அதனை ஏற்க மறுத்து பார்வதி அன்னையே தாம்பூலத்திற்குத் தகுதியுடையவள் என்று உறுதியாகக் கூறிவிட்டாள். பார்வதிதேவியும் அதனை ஏற்க மறுத்து, அறிவு, ஞானம் ஆகியவற்றின் வடிவமாகத் திகழ்பவன் முருகனேயாதலால் அவனே வித்வத் தாம்பூலம் பெறத் தகுதியானவன் என்று கூறிவிட்டாள். உடனே சபையோர் அனைவரும் முருகனை வணங்கித் தாம்பூலத்தை ஏற்குமாறு வேண்டினர். இவ்வாறு முருகன் சகலகலா வல்லபன்

என்ற சிறப்புப் பெற்ருன். இக்குறிப்பை அருணகிரி நாதர் "கல் அசல மங்கை எல்லையில் விரிந்த கல்வி கரை கண்ட புலவ" என்றும் "புந்தி நிறை அறிவாளன்" என்றும் போற்றுவார். சுப்பிரமணிய பராக்கிரமத்திலும் இவ்வரலாறு குறிப்பிடப் பட்டுள்ளது.

## 32. நடன மூர்த்தி

தமிழில் கூத்து பற்றிய தொன்மையான நூல் 'நாடக நூல்' என்பதாகும். அதில் "தெய்வ விருத்தி" என்று பதினெருவகை கூத்துக்கள் பேசப்படும். இவை அசுரர்களைக் கொல்வதற்காக தேவர்களும் கடவுளரும் ஆடிய கூத்துக்களாகும்.

முருகன் "குடை", "துடி", "பவுரி" என்னும் பலவகை கூத்துக்களை ஆடினுர் என்பர். இவையே யன்றி குரவைக் கூத்து, வெறிக் கூத்து, வள்ளிக் கூத்து என்னும் மூன்றுவிதக் கூத்துக்களும் முருகனுடன் தொடர்புடையவை.

முருகன் குடையுடன் கூத்தாடி அசுரர்களை வென்ருர், ஆதலின் அவருக்கு "சத்ரநடன மூர்த்தி" என்று பெயர். குடைக் கூத்து இதுவே. சிலப்பதிகாரம் முருகன் ஆடிய குடைக்கூத்தினை விளக்குகின்றது.

உடுக்கை (துடி)யை ஒலித்து முருகன் ஆடிய துடிக்கூத்து, சூரபதுமனின் மாயையை விரட்டியது.

சிதம்பரத்தில் எல்லாவித இசைக்கருவிகளும் ஒலிக்க முருகன் நடனமாடினுன் என்று அருணகிரி நாதர் பேசுகிருர்.

''முரசு பேரித் திமிலை துடிகள் பூரித்தவில்கள்
முருடு காளப் பறைகள் தாரை கொம்பு வளை
முகடுபேர் வுற்றவொலி பிடிகள் போலொத்த மறை
முதுவர் பாடிக்குமுற வேயிறந்தசுரர்
முடிகளோ டெற்றியரி யிரதமானைப் பிணமொ
டிவுளிவேலைக்குருதி நீர் மிதந்து
திசையெங்குமோட
முடுகிவேல் விட்டு வட குவடுவாய் விட்டமரர்
முனிவராடிப்புகழ வேத விஞ்சையர்கள்
முழவு வீணைக்கினரி யமுர்த கீதத்தொனிகள்
முறையதாகப் பறைய வோதிரம் பையர்கள்
முலைகள் பாரிக்கவுடனடன மாடிற்றுவர
முடிபதாகைப் பொலியவேகடங்குலவு கந்தவேளே''

—இரசபா கொத்த......சிதம்பரம் திருப்புகழ்.

திகுடதிந்திந் தகுட தந்தந்
திகுட திந்திந் தோதிந்தம்
டகுட டண்டண் டிகுட டிண்டிண்
டகுட டண்டண் டோடிண்டிண்
டிமுட டிண்டிண் டுமுட டுண்டுண்
டிமுட டிண்டென் றேசங்கம் பலபேரி
செகணஞ்சஞ் சலிகை பஞ்சம்
பறைமுழங்கும் போரண்டஞ்
சிலை யிடிந்துங் கடல் வடிந்தும்
பொடி பறந்துண் டோர்சங்கஞ்
சிர முடைந்தண் டவுணரங்கம்
பிண மலைந்தன்றுடுஞ்செங் கதிர் வேலா

—சகுட முந்துங்...திருப்புகழ்.

தரிகிட தரிகிட தாகு டாத்திரி
கிடதரி கிடதரி தாவெ ஞுச்சில
சபத மொ டெழுவன தாள வாச்சிய முடனே நீள்
அகுகுகு குகுவென ஆளி வாய்ப்பல

அலகைக ளடைவுட னும் ஆட்டமும்
அரனவனுடன் எழுகாளி கூட்டமும் அகலாதே
அரிதுயில் சயன வியாள மூர்த்தனும்
அணிதிகழ் மிகுபுலி யூர்வியாக்ரனும்
அரிதெனமுறைமுறை யாடல் காட்டிய பெருமானே

—'மகரமொடுறு'...திருப்புகழ்.

தித்தா திரித்திகுட தத்தா தனத்தகுத
தாதத் தனந்ததன தானத் தனந்ததன
செச்சே செகுச்செகுகு தித்தா திமித்ததிகு
தாதத்த செந்திகுத தீதத்த செந்தரிக
தித்தா கிடக்கணக டக்கா குகுக்குகுகு
தோதக் கணங்கணக கூகுக் கிணங்கிணென
ஒருமயிலேறி.........

—'இத்தாரணிக்குள்' திருப்புகழ்.

முருகனின் நடன வகையில் ஒன்றை சேயூர் திருக்கோயிலிலும், திருப்போரூர் கோயில் மண்டபத் தூணிலும் காண்கிறோம். சென்னை அருங்காட்சியகத்திலும் உள்ளது.

---

## முருகன் ஆயுதங்கள்

1. அங்குசம் 2. வில் 3. சூலம் 4. சங்கம் 5. கலப்பை 6. தாமரை 7. தண்டம் 8. குலிசம் 9. ஜபமாலை 10. சக்தி 11. கேடயம் 12. வச்சிரம் 13. கமண்டலம் 14. கோழி (குக்குடம்) 15. அம்பு 16. கொடி 17. சக்கரம் 18. பாசம் 19. கதை 20. மணி 21. உளி(டங்கம்) 22. மலரம்பு (வல்லி) 23. கரும்புவில் 24. உலக்கை (தோமரம்) 25. நீலோத்பலம்
















முருகன் ஆயுதங்கள்

# 4. கந்தனின் கவின்மிகு கோலங்கள்

*சிற்ப நூல்களில் குறிக்கப்பெருத சில அற்புதமான வடிவ அமைப்புகளில் கந்தன் அழகைக் காணும்போது மனம் மகிழும்; சிந்தை லயிக்கும்; உடல் சிலிர்க்கும். அத்தகைய அரிய வடிவங்களைக் கண்டு இன்புறலாம் வாருங்கள் !*

## லட்சண குமாரன்

கந்தனின் கவின்மிகு கோலங்களில் காண்பதற் கரிய ஒன்று, வள்ளியை இடமாகக் கொண்ட வள்ளளின் எழிற் கோலம். கம்பீரமாகக் காட்சி யளிக்கும் இந்த அழகுத் திருமேனியைக் காண குமாரர் கோயிலுக்குச் செல்லலாம் வாருங்கள்! நாகர் கோயிலி லிருந்து தக்கலை செல்லும் வழியில் 16 கிலோ மீட்டரில் உள்ளது இத்திருத்தலம். நாகர் கோயிலிலிருந்து திருவனந்தபுரம் செல்லும் பஸ்களிலும் இந்த இடத்தை அடைய முடியும். குன்றின் மீது குமரன் காட்சி தரும் அழகை வருணிக்க இயலாது. சுற்றிலும் பச்சை பசேல் என வயலும், தென்னந்தோப்புகளுடன் மலையின் எழில் மிகு காட்சி மிகவும் இனிமையானது. குன்றின் மீது முப்பத்தெட்டு படி ஏறிவந்தால் கோலக் குமரனைக் காணலாம். எங்கேயும் காண இயலாத வகையில் ஒன்பதடி உயரத்தில் வலக்கரம் அபயமாகவும் இடக்கரம் வரதமாகவும் உள்ள அரிய அமைப்பு, சிற்ப நூலில் கூறப்பெறும் குமார சுவாமியின் வடிவத்

தினின்றும் மாறுபட்ட அமைப்பில் இரண்டு கரங்களுடன் விளங்குவதும், எங்கும் வலப்பக்கமே காணப்பெறும் வள்ளி இங்கு பெருமானுக்கு இடப்பக்கம் உள்ளதும், யாவரும் கண்டு அதிசயிக்கும் வகையில் ஆறடி உயரத்தில் வள்ளியம்மை காணப்படுவதும் அற்புதமானது.

கிழக்கு நோக்கி விளங்கி அன்பர்களுக்கு அருள் வழங்கும் இந்த குறிஞ்சிக் கிழவனை மக்கள் எப்போதும் சூழ்ந்த வண்ணம் இருப்பது ஓர் இனிய காட்சியாகும். குரவனுக்கு அபிஷேக அலங்காரம் செய்ய சிவாசாரியர்கள் ஏணியின் மீது ஏறியே செய்கிறுர்கள். வெள்ளிக் கிழமைகளில் சிறப்பாக வழிபாடு நடைபெறுகிறது. வள்ளி குகை, தினைப்புனம், வள்ளிச்சோலை, கிழவன் சோலை ஆகிய இடங்கள் கண்டு மகிழத்தக்கது. வள்ளி திருமணம் இங்குதான் நடந்ததாக இப்பகுதி மக்கள் கூறுகின்றனர். எனவே ஆண்டு தோறும் வள்ளி திருமண வைபவம் இங்கே சிறப்பாக நடைபெறுகிறது.

**"ரத்தன பணுகிருத்தன் மெய்ச்சுதனு நாடு மிக்க
லட்சண குமார சுப்ரமணியோனே"**

என்று அருணகிரியாரோடு நாமும் சேர்ந்து இந்தக் கோலக்குமரனைப் போற்றுவோம்.

## ஐந்துமுக சிவகுமாரன்

ஐந்து முகத்தோடு அதோ முகமாய்த் திருமுகங்கள் ஆறுன ஆறுமுகப் பெருமான் தந்தையைப் போல் ஐந்து முகத்தோடு காட்சியளிக்கும் அரிய மலைத்தலம் ஓதிமலை. ஓதல் என்பது உபதேசம் செய்தல் என்ற பொருளில் (ஞானம்) ஓதியமலை என்ற குறிப்பில்

திருப்புகழில் அருணகிரியார் குறிக்கும் "ஞான மலை"யே இத்தலம் என்று கருத இடம் உண்டு. (ஏனெனில் அருணகிரியார் திருப்புகழில் பரவிய "ஞானமலை" என்ற தலம் எங்குள்ளது என்பது இதுவரை ஆய்வு செய்யப்படவில்லை.)

கோவை மாவட்டம் அவிநாசியிலிருந்து மேட்டுப் பாளையம் செல்லும் வழியில் புன்செய் புளியம்பட்டிக் கருகிலுள்ள "இரும்பறை" என்ற ஊருக்கு அருகில் உள்ளது ஓதிமலை. 1800 படிகளுக்கு மேல் அமைந்துள்ள இக்கோயிலில் முருகன் நின்ற கோலத்தில் பின்புறம் மயில் நிற்க, ஐந்து முகம்—எட்டு கரங்களுடன் காட்சியளிப்பது ஓர் அற்புத வடிவமைப்பாகும். சிற்ப நூல்களில் காணப்பெறும் "கிரௌஞ்ச பேதனர்" என்ற வடிவமைப்பில் முருகன் ஆறுமுகங்கள் எட்டு கரங்களுடன் காட்சியளிப்பார். ஓதிமலை முருகன் ஐந்து முகங்கள் எட்டு கரங்கள் கொண்டாலும் இவரையும் 'கிரௌஞ்ச பேதனர்' என்ற வடிவமாகக் கருதலாம்.

## சூர்மா தடிந்த சுடர் வேலோன்

சிதம்பரம் சபாநாயகர் கோயிலில் மேலக் கோபுர வாயிலில் ஓர் கவின்மிகு வடிவம் உள்ளது. வெற்றி வேற்பெருமான் ஆறுமுகங்களும் பத்து கரங்களும் கொண்டவராகவும் ஓர்கரத்தில் வேலினை ஏவிய போர்க் கோலத்தில் கோபாவேசமாகக் காட்சியளிக்கிறார். அசுரர்களை வேல் கொண்டு அழிக்கும் இந்தக் காட்சி கண்டோரை பிரமிக்கச் செய்யும். சூர்மா தடிந்த சுடர் வேலோனின் இந்த அற்புதக் கோலம் பத்துகரங்கள் கொண்டதாயிருப்பினும் "கிரௌஞ்ச பேதனர்" என்ற வடிவமைப்போடு ஒப்பிடலாம்.



சிவை சீராட்டும் சிறுவன்

வழுவூர் (பக்கம்-83)



பரிவுடன் கவுரிகொஞ்சும் கந்தன்

திருக்கடவூர் (பக்கம்-84)



முத்தம் தரவரும் முத்துக்குமரன்
பல்லவனீச்சரம் (காவிரிப்பூம்பட்டினம்)
(பக்கம்-85)



கழுகுமலையில் அழகுமயில்

(ஒருமுகம்-ஆறுகரங்கள்) (பக்கம்-86)

தின்னியம் (திருச்சி அருகில்)
(தேவியர் மயில்வாகனத்தில்) (பக்கம்-87)



குன்றக்குடி
தேவியர் மயில் வாகனத்தில்
(பக்கம்-87)

மயிலாப்பூர்
(தேவியர் யானை வாகனத்தில்)
(பக்கம்-88)



நடன சுப்ரமண்யர்
சென்னை அரசு அருங்காட்சியகம்
(பக்கம்-74)



முழுதும் அழகிய குமரன்
பொரவச்சேரி சண்முகர் (சிக்கல் அருகில்)



வேழமங்கையும் வேடமங்கையும்

பட்டீச்வரம் ஸ்ரீதேனுபுரிச்வரர் கோயில் தூண்சிற்பம்

(பக்கம்-69)

**"சூரர்க்கே ஒரு கோளரி யாமென**
**நிலத் தோகை மயூரம தேறிய**
**தூளிக்கே கடல் தூர நிசாசரர் களமீதே**
**சோரிக் கேவெகு ரூபமதா விடு**
**தானத் தானன தானன தானன**
**சூழிட் டேபல சோகுக ளொடவ பொரும் வேலா"**

## கும்பமுனி கும்பிடும் தம்பிரான்

ஞான உபதேசகுன ஞானபண்டிதன் தந்தைக்கே பிரணவ உபதேசம் செய்தவன் என்றால் அவன் பெருமை என்னே!

**வேலா சரணம் சரணம் என்மேல் வெகுளாமல் இனி**
**மேலா யினும் கடைக்கண் பார் பருப்பத வேந்தன் அருள்**
**பாலா குறுமுனி யார்க்கும் திருப்புகழ் பண்ணவர்க்கும்**
**ஆலா லம் உண்டவர்க்கும் உபதேசித்த ஆண்டவனே'**

முருகப் பெருமானிடம் நேரடியாக உபதேசம் பெற்றவர்கள் மூவர். முதல்வர் சிவபெருமான் இரண்டாமவர் அகத்தியர்; மூன்றுமவர் அருணகிரி யார். தமிழ்முனி அகத்தியருக்கு இயல், இசை, நாடகம் முதலிய எல்லாக் கலைகளையும் உணர்த்திய தம்பிரான் என்று அருணகிரியார் கூறுவார். "இயலும் இசைகளும் நடனமும் வகைவகை சத்யப்படிக்கினிது அகஸ்தியருக்கு உணர்த்தியருள் தம்பிரான்". இந்த உபதேசகாட்சியைத் திருப்போரூர் கந்தசாமி கோயிலில் உள்ள மண்டபத்தூணில் கண்டு இன்புறலாம்.

## வான் களிற்றை மணந்த வடிவழகன்

தேவ சேனையைக் கைப்பிடித்து தேவ சேனாதிபதி யான தேவாதி தேவன் திருமணக் கோலத்தில் திகழும் கவின் மிகு கோலத்தைக் காண திருப்பரங்குன்றத்

திற்குச் செல்ல வேண்டும் "களிற்றினைச் செகுத்த களிற்றுனுக்கிளைய களிறுவான் களிற்றினை மணந்து' என்று திருப்பரங்கிரி புராணம்அழகாகக் கூறும். தேவ சேனையை மணந்த தலமாகிய பரங்குன்றில் தூண் சிற்பமாக அமைந்துள்ள இக் கல்யாண கோலத்தைக் கண்டவர் விண்டிலர். முருகன் தேவயானையின் வலக் கரம் பற்றியிருக்க அருகில் தேவேந்திரன் பெருமை யுடன் தாரைவார்க்க கலையழகுடன் மிளிரும் இக் கல்யாணக் கோலம் இன்பத்தை அளிக்கும் இனிய காட்சியாகும். தெய்வயானைப் பிராட்டியார் தலையை சற்று சாய்த்து ஓரக்கண்ணுல் கந்தனைக் கண்டுகளிப் பெய்தும் கலையழகு மிளிரும் அற்புதக்காட்சி கண் கொள்ளாக் காட்சியாகும்.

## வள்ளியை வேட்டவன்

மொய்தாரணி குழல் வள்ளியை வேட்ட வள்ளல் குரவர் கூட்டத்தில் அன்று கிழவனுய்ப்புக்கு நின்று குருவியோட்டித் திரிந்த தவமானை, குமணதாக்கி, சிறந்த வடிவு காட்டிப் புணர்ந்த பெருமான். அவன் அழகைக் காவியங்களும் ஓவியங்களும் இனிது எடுத்துக்காட்டும். அவன் வள்ளியை அணைத்து நிற்கும் வனப்புறு அழகைக்காண ஆந்திர மாநிலத்திலி லுள்ள ஆலம்பூர் காட்சி சாலைக்குச் செல்ல வேண்டும். "குறவர் மடமகள் கொடி போல் நுசுப்பின் மடவரல் வள்ளியொடு நகை அமர்ந்தன்றே" என்று சங்கப் புலவர் நக்கீரரது திருமுருகாற்றுப்படை வரிகளுக்கு வடிவம் கிடைக்கிறது. வேடனுக வந்து வள்ளியை வேட்ட கோலத்தை நினைவுறுத்த வலக்கரம் ஒன்றில் வேலும் மற்ரென்று மிடுக்காக இடுப்பிலும் இடக்கரம் ஒன்று வள்ளியை அணைக்கும் இனிய அழகுடன் பின் புறம் மயிலுடன் இத்தகைய எழிற் கோலத்தை வேறு

எங்கும் காண இயலாது. "மரகதவித நேர் முத்தார் நகை குறமகள் அதிரைப் பூண்முலை மருவிய மணவாளக் கோலமும்" உடையவனுகக் காட்சியளிக்கும் இந்த அரிய வடிவம் எந்தக் கோயிலிலிருந்து எடுத்து வரப்பட்டு இந்த காட்சி சாலைக்கு வந்ததோ? எனினும் மிக மிக அரிய அற்புதப்படைப்பு. இதைக் காண்பதற்காகவாவது ஒரு முறை ஆலம்பூர் மியூசியம் சென்று வரலாமல்லவா!

## 'பரிவுடன் கவுரி கொஞ்சும் பாலன்

வழுவூர் : கந்தனை குழந்தை வடிவில் காண்போர் வியத்து பெருமிதம் உறும் வகையில் அமைந்த கோலங்களில் கவுரி கந்தனைக் கையில் ஏந்தி மகிழும் அழகு! அப்பப்பா! சொல்லில் வடிக்க முடியாது. ஆறு முகனின் ஆறுமாதக் குழந்தை வடிவமோ? என்று நம் ஆவலோடு பார்ப்போம்! எங்கே? அஷ்ட வீரட்ட தலங்களில் ஒன்முன வழுவூரில்தான்! அம்பிகை வலது கையில் குமரனை அணைத்து இருக்கும் இவ்வரிய செப்புத்திருமேனி அமைப்பே ஒரு வியப்பை அளிக்கும். இவ் அம்பிக்கையை குஹாம்பிகை என்று கூறுகிருர்கள்.

**"ஆதி சங்கரனுர் பாக மாதுமை**
**கோல அம்புகை மாதா மனோமணி**
**ஆயிசுந்தரி தாயான நாரணி அபிராமி**
**ஆவல்கொண்டு விருலே சிராடவே........"**

என்று சிவை சிராட்டும் சிறுவனின் அழகை பார்த்து மகிழ்வதுடன் இங்குள்ள கஜசம்ஹாரர், பிட்சாடனர், மோகினி ஆகியோர்களையும் தரிசித்து மகிழவும் ஒரு முறை வழுவூர் சென்று வாருங்களேன்! மயிலாடு

துறைக்கு அருகில் மங்கைநல்லூர் செல்லும் வழியில் தான் உள்ளது வழுவூர்.

**திருக்கடவூர் :** பரிவுடன் கவுரி கொஞ்சும் கடம்பனைக் காண வழுவூரிலிருந்து இதோ கடவூர் செல்வோம். காலனைக் காலால் உதைத்த கால காலன் அபிராமியுடன் உறையும் அமிர்தகடேச்வரர் திருக்கோயிலில் தான் பாலன் பார்வதிதேவியின் வலது புறம் தாயைத் தழுவிய தனயனாக காட்சியளிக்கிறான்.

**"...கருணை விழி கிருபை முந்த**
**பரிவினொடு கவுரி கொஞ்ச**
**கலகலென வரு கடம்ப..."**

என்ற திருப்புகழ்ப் பாடல் வரிகளுக்கு கலை வடிவம் இது. ஓராண்டு நிறைவு பெற்ற பாலனோ அவன்! என்று நமக்குத் தோன்றும். ம்... அப்படித்தான் இருக்கும். இவனைக்கண்டு இவன் அழகை ரசித்தபின் அருகில் ஆறு கிலோ மீட்டரில் உள்ள இடைக்கழி அழகனையும் பார்த்துவிட்டு வரலாமே!

**பல்லவனீச்சரம் :** ஒரு வயது குழந்தை இப்போது வளர்ந்து இரண்டு வயது பாலனாகிவிட்டான். தாயின் அருகில் அமர்ந்திருக்கிறான் தனயன். தண்டையணி வெண்டையம் கிண் கிணி சதங்கையும் தண் கழல் சிலம்புடன் கொஞ்சவே வரும் குமரன். அவனைக் கண்டு கண்டு இன்புற்று விம்மிதம் அடையும் தாயின் அன்புப் பார்வையில்தான் எத்தனை அழகு! கையில் தாமரை மலர் ஏந்தியுள்ள இந்த பாலன் நம் கண்களைவிட்டு நீங்கமாட்டான். பூம்புகார் அருகில் உள்ள பல்லவனீச் சரம் கோயிலில்தான் இந்த கௌரி நந்தனின் கோலம் காணக் கிடைக்கிறது. அங்கு செல்லும்போது

அடுத்துள்ள சாயாவனம் சென்று வில்லேந்திய வேலனையும் தரிசிக்க மறந்து விடாதீர்!

வழுவூர், திருக்கடவூர், பல்லவனீச்சரம் ஆகிய மூன்று இடங்களிலும் பார்வதியின் வலது புறத்தில் முருகன் இருப்பது சிந்தித்தற்குரியது.

திருவாரூர் : ஜகம் தொழும் சரவணப் பெருமாள் தளர்நடையிட்டு வருகிறான். சின்னஞ்சிறு சதங்கைகள் கொஞ்சிட, தண்டைகள் 'கலின், கலின், கலின்' என்று ஒலிக்க, அரைஞாணில் உள்ள மணிகள் "கிணின், கிணின்" என்று அசைய இனியநடையிட்டு வரும் அழகைப் பார்த்து பெருமிதத்துடன் அவனை முத்தமிட அழைக்கிறாள் தாய்.

கொந்தவிழ் சரண் சரண் சரண் எனக்
கும்பிடு புரந்தரன் பதிபெறக்
குஞ்சரி குயம்புயம் பெறஅரக் கருமாளக்
குன்றிடிய அம்பொனின் திருவரை
கிண்கிணி கிணின் கிணின் கிணின்என
குண்டலம் அசைந்திளங் குழைகளிற் ப்ரபைவீசத்
தந்தன தனம்தனம் தனாஎனச்
செஞ்சிறு சதங்கை கொஞ்சிட மணித்
தண்டைகள் கலின் கலின் கலின்எனத் திருவான
சங்கரி மனம் கனிந்துருக முத்
தம்தர வரும் செழுந் தளர்நடைச்
சந்ததி சகம்தொழும் சரவணப் பெருமாளே.

என்று அருணகிரியார் சொற்காட்சியில் கண்டதை நாம் நிஜக்காட்சியாய்க் கண்டு இன்புற திருஆரூர் தியாகராஜப் பெருமான் திருக்கோயிலுக்குச் செல்ல

வேண்டும். அங்குள்ள நீலோத்பலாம்பிகை திருக்கோயிலில் அம்பிகைக்கு அருகில் சேடி முருகனை அழைத்துவர அவன் நடந்துவரும் அழகைக் காணக் கண்கோடி வேண்டுமே!

## கழுகுமலையில் அழகுமயில்

அற்புதமான கோலத்தில் அழகுமயிலில் அமர்ந்த அருள் வடிவைக்கான கழுகுமலைக்குச் செல்லவேண்டும் ஆம்! ஒருமுகமும் ஆறுகரங்களும் கொண்ட அண்ணலின் வடிவம். மயிலின் முகம் இடப்புறம். அடியார்களுக்கு அபயமளிக்கும் கரம் ஒன்றும் திருவடி நிழலைக் காட்டும் வரத கரம் ஒன்றும் சக்தியும், கத்தியும், வஜ்ரமும், கேடயமும் கொண்ட நாற்கரங்களும் பார்ப்போரை பரவசப்படுத்தும். கம்பீரமான மயிலில் வீற்றிருக்கும் கந்தவேலன் மாட்சி சிந்தையை ஈர்க்கும் காட்சி.

**"வேண்டும் அடியர் புலவர் வேண்ட அரியபொருளை**
**வேண்டும் அளவில் உதவும் கழுகுமலை வள்ளல்"**

அந்த வள்ளளிடம் சென்று வரம் வாங்கி வர வேண்டுமல்லவா?

திருவண்ணாமலை (வில்லேந்திய வேலன்), கோடிக்கரை (அமிர்தகர சுப்ரமணியன்), கழுகுமலை ஆகிய தலங்களில் அமைந்துள்ள ஒருமுகம் ஆறுகரங்கள் கொண்ட அரிய வடிவங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு தனித்தன்மை உள்ளது அல்லவா?

## வேழ மயிலும் வேட மயிலும்

"பிணிமுகம் எனப்படும் யானையையும், இனிய காட்டில் உலவும் மயிலையும் வாகனமாகக் கொண்டு

உல்லாசத்துடன் அவைமீது ஏறும் திருவடியை உடையவரே! என்று அருணகிரியார் அழைப்பர்.

''உவாவினி யாகனு வினிலாவு மயில்வாகனம்
உலாசமுட னேறுங் கழலோனே''

ஆனால் முருகனது தேவியர் தனித்தனியே மயில் வாகனத்தில் வரும் கோலத்தை எங்கேயாவது காண இயலுமா? ஆம்! வேழமயிலாகிய தேவயானையும் கான மயிலாகிய வள்ளியும் தனித் தனியே மயில்வாகனத்தில் வரும் அழகை இரண்டு தலங்களில் கண்டு இன்புறமுடியும். ஒன்று குன்றக்குடி; மற்றொன்று திருச்சிக்கு அருகில் உள்ள திண்ணியம் என்ற கிராமம். குன்றக்குடி மூலஸ்தானத்தில் சண்முகநாதனுக்கு இருபுறமும் தேவியர் மயில் வாகனத்தில் அமர்ந்துள்ள எழிற்கோலம் மிகவும் அழகானது. திண்ணியத்தில் எங்கும் காண இயலாத தெற்கு நோக்கிய சன்னதியாக ஆறுமுகப் பெருமான் சன்னதி அமைந்துள்ளதும், வள்ளி தேவயானை இருவரும் அழகுமயிலில் ஒயிலாக அமர்ந்த இனிய கோலமும் அவசியம் சென்று வழிபட வேண்டிய தொன்றாகும். திருச்சி மாவட்டத்தில் பல்வேறு குடும்பத்தினருக்கு சிறந்த பிரார்த்தனைத் தலமாக திண்ணியம் ஆறுமுகன் கோயில் அமைந்துள்ளது. சோழர் காலத்திய இந்த அற்புதப் படைப்பை அவசியம் சென்று தரிசிக்க வேண்டும்.

## வானப் பிடியும் கானகப் பிடியும்

''பெண் கரியுடன் நிலை பெறு கென் றிந்திரன்
வெண்கரி தன்னையும் விசாகற்கீந்து''

என்று பெண்யானையாகிய தேவசேனையையும், வெண்

யானையாகிய ஐராவதத்தையும் முருகப் பெருமான் பெற்றதாக தணிகாசலப் புராணம் போற்றும்.

**''தெய்வ யானைக் கிளைய வெள்ளை யானைத் தலைவ**
**தெய்வ யானைக் கினிய பெருமான்''**

என்று அருணகிரியார் தணிகைத் திருப்புகழில் அழைப்பார். வெள்ளை யானையால் வளர்க்கப் பெற்ற தெய்வயானை யானை வாகனத்தில் வருவது என்பது இயற்கை. ஆனால் யானையின் பெயரைக் கேட்டாலே பயந்து நடுங்கி காததூரம் ஓடக் கூடிய வள்ளி யானை வாகனத்தில் அமர்ந்து வருவது என்பது நினைத்துப் பார்க்க முடியாத அதிசயம். திருமயிலையில் வாழ்ந்த சிற்பி ஒருவன் இக்கற்பனைக்கு வடிவம் கொடுத்தான். இந்த அதிசயமான வடிவைக்காண வேறு எங்கும் செல்ல வேண்டாம்; சென்னை மாநகரின் நடு நாயகமான திருமயிலை கபாலீச்சரர் திருக்கோயிலில் சிங்கார வேலவர் சன்னதியில் இந்த அற்புதத்தைக் காணலாம். சிங்கார வேலர் ஆறுமுகமும் பன்னிரு கரங்களும் கொண்டு கம்பீரமாக மயில்மேல் அமர்ந்திருக்க அவரை விட கம்பீரமாக வானப்பிடியாகிய தேவயானையும் கானகப் பிடியாகிய வள்ளியும் தனித்தனியே யானை வாகனத்தில் அமர்ந்துள்ள மிக மிக அதிசயமான கோலம் இதுவரை நாம் கண்டு களித்த கவின் மிகு கோலங்களில் ஒப்பற்றதும் தலையாயதும் என்று சொன்னால் மிகையாகாது. ஆகமத்திலோ சிற்ப நூல் களிலோ குறிக்கப் பெறாத இந்த அதிசயக் கோலம் மயிலைச் சிற்பியின் கற்பனையின் எல்லை என்று சொல்லலாம் அல்லவா!

முழுதும் அழகிய குமரனை பலவித கவின்மிகு கோலங்களில் கண்டு மகிழ்ந்த நாம் அவனை எவ்வாறு வழிபட வேண்டும் என்று சற்று சிந்திப்போம்.

# 5. முருகன் வழிபாடு

நாம் இறைவனை வழிபடும் போது, எப்படி வழிபடுவது, வழிபாட்டில் எப்படி தியானிப்பது, என்ன வேண்டுவது போன்றவற்றை முறைப்படி அறிந்து பயிலாததால் நமது கோயில்களில் விளங்கும் மூர்த்திகளிடமிருந்து நாம் பெற வேண்டிய பேறுகளைப் பெற இயலாதவர்களாகி, வறியவர் போல ஆன்ம நெறியில் அலமந்து இங்கும் அங்கும் ஓடுகிறோம்.

நமது திருக்கோயிலில் விளங்கும் ஒவ்வொரு மூர்த்தமும், நமக்கு ஆன்மீக வளங்களை வழங்கும் கருவூலமாகவே நமது முன்னோர்களால் நிறுவப்பெற்றுள்ளது. நாம் துதிக்கும் போது அம்மூர்த்தத்தின் வாயிலாக அப்பெருஞ்சக்தி நமக்கு அருளுகின்றது. ஒவ்வொரு மூர்த்தமும் ஒரு ஆன்மீக ஊற்று. அம்மூர்த்தத்தினைக் காணும் போது, அதனுடன் உயிரோட்டமுடன் உறவு கொண்டு பேச வேண்டும். நம்மோடு பேசவும் நமக்கு அருள் புரியவும் அத்திருவுருவங்கள் மூலமாக வழியமைத்துக் கொடுத்துள்ள நமது அருளாளர்களின் பெருங்கருணையை என்னென்பது!

பல கோயில்களிலும் நாம் சென்று வழிபடும் போது என்ன சொல்லி வழிபடுவது என்றே நம்மில் பலருக்குத் தெரிவதில்லை. அருளாளர் பாடல்களைப் பாடி வழிபட வேண்டும். ஆலயங்களில் அந்தந்த சந்நிதிகளில் அவ்வவற்றிற்குரிய துதிப்பாடல்களை எழுதியோ கல்வெட்டில் அமைத்தோ வைத்திருந்தால்

வழிபடுவோருக்குப் பேருதவியாக இருக்கும். ஒவ்வொரு தல மூர்த்திக்கும் அருளாளர் பாடல்கள் பல அமைந்திருப்பதைக் காணலாம். தேவார திருமுறைகள், திருப்புகழ், பிள்ளைத்தமிழ், பதிகம் முதலிய பனுவல்களை அவ்வத்தலத்திற்குரியவற்றை அத்திருக் கோயில்களில் பதிக்க வேண்டும்.

வீடுகளிலும் முறையான வழிபாட்டுப் பயிற்சி இருத்தல் வேண்டும். குடும்பத்தில் பக்தியுடன் வழிபடும் பயிற்சி இருந்தாலே குழந்தைகளுக்கு பக்தி நாட்டம் ஏற்படும். பெற்றோர்கள் விலங்குகளைப் போல வாழ்ந்தால் குழந்தைகளிடம் எவ்வாறு இறையுணர்வு வளர முடியும்? பண்பாடு வீட்டிலேயே வளரத் தொடங்குகிறது. ஆன்மநேய ஒருமைப்பாடு உணர்வுக்கு நாற்றங்காலாக வீடுகளில் முறையான சமய உணர்வும் பயிற்சியும் இருத்தல் வேண்டும்.

ஏதாவதொரு வழிபாட்டு முறையை ஒவ்வொருவரும் பயின்று இருத்தல் வேண்டும்.

இறைவனிடம் என்ன வேண்டுவது? இது மிக முக்கியமான ஒன்று. பொன்னும் பொருளும் போகமும் வேண்டுவதை விட மனிதப் பண்புகளை வேண்டுவதே சிறந்த வழிபாடு என்று நமது ஆன்றோர் நமக்கு அறிவுறுத்திச் சென்றுள்ளனர்.

கடுவன் இளவெயினனார் பரிபாடலில் முருகனிடம் வேண்டுவதைக் கேளுங்கள்.

> "..................யாஅம் இரப்பவை
> பொருளும் பொன்னும் போகமும் அல்ல; நின்பால்
> அருளும் அன்பும், அறிவும், மூன்றும்
> உருளிணர்க்கடம்பின் ஒலிதாரோயே."
>
> —(பரிபாடல் 5 : 78-81)

மற்ருெரு பரி பாடலில் முருகனைப் போற்றுவதையும் கேளுங்கள். ‘‘மணி நிற மயிலினையும் உயர்ந்த கோழிக் கொடியினையும் உடைய முருகா! பிணி முகத்தின் மேல் ஊர்ந்து போர் செய்து வெற்றி கொள்ளும் தலைவ! பிறவித் துன்பம் நீங்கிய இன்பம் மலிந்த நாட்களை யாம் பெறுக என நின்னை வேண்டி யாமும் எம் கேளிரும் மக்களைப் பணிந்து ஒழுகுதலின்றி நின்புகழை ஏத்தி நின் திருப்பரங்குன்றத்தினைப் பாடித் தொழுகின்ருேம்; அருள் புரிவாயாக’’

‘‘மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடிப்
பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ!
பிணியொரீஇ நின்புகழ் ஏத்தி
அணிநெடுங் குன்றம் பாடுதும் தொழுதும்
அவை, யாமும் எம்சுற்றமும் பரவுதும்
ஏமவைகல் பெறுக யாம் எனவே.’’

—(பரிபாடல் 17 : 48–53.)

நல்லச்சுதஞரின் பரிபாடலும் நமக்கு முருக வழிபாட்டில் வழிகாட்டுகிறது. ‘‘மாற்ருரைப் போரின் கண் கூரிய வேற்படையும் பன்னிருதோளையும் ஆறு திருமுகத்தையும் கொண்டு அடியோடு அழித்த செல்வ! சுற்றத்தோடு ஒருங்கே நின் அடியின்கண் உறைதல் இன்றுபோல் என்றும் எமக்கு இயைவதாக என்று பரவுகின்ருேம். அருள்புரிவாயாக’’

‘‘மாறமர் அட்டவை மறவேல் பெயர்ப்பவை
ஆறிரு தோளவை அறுமுகம் விரித்தவை
நன்றமர் ஆயமொடு ஒருங்குநின்னடியுறை
இன்றுபோல் இயைக எனப் பரவுதும்
ஒன்ருர்த் தேய்த்த செல்வநிற் ௌருழுதே.’’

—(பரிபாடல் : 21-66–70)

முருகவேள் அருள்பெற்ற அருணைவள்ளல் கருணை மிகு அருணகிரிநாத சுவாமிகள் நாம் எவ்வாறு முருகனைத் துதிக்க வேண்டும் என வழிகாட்டியுள்ளார். அவரது திருப்புகழ் 'வரிகள் நம்மை முருக வழிபாட்டில் முழுமையாக்குவன.

**''பதினாறு உலகத்தினில் உற்றுறு பத்தர்கள்**
**ஏது நினைத்தது மெத்த அளித்தருள் இளையோனே''**

என்று நமக்காக வரம் வாங்கிய வள்ளல் அவர்.

**உன்புகழே பாடி நான்இனி அன்புடன் ஆசாரபூசைசெய்து**
**உய்ந்திட வீணாள்படாதருள் புரிவாயே**

என வேண்டுகிறார் நாம் வழிபடுவதற்காக.

**மறவாது உன்நாமம் புகழ்பவர் பாதம் தொழ இனி**
**நாடும்படி அருள்புரிவாயே**

**''முருகா உன் பதமலர் உளத்தில் நாளும் நினைவுறு**
**கருத்தர் தாள்கள்**
**பணியவும் எனக்கு ஞானம் அருள்வாயே.''**

என்று அடியாரை வணங்கும் அருளையும் வேண்டுகிறார்.

**நோய்கள் பிறவிகள் தோறும் எனை**
**நலியாதபடி உனதாள்கள் அருள்வாயே**

என்று உயிர்நோய்களும் உடல்நோய்களும் எப்பிறவியிலும் நம்மை நலியச் செய்யாமலிருக்கப் பிரார்த்தனை செய்கிறார்.

''யான் அவா அடங்க என்று பெறுவேனோ'' என்று வேண்டி, ''இறைவா எதுதா அதுதா'' என்று அவனிடம் ஒப்படைத்துவிடுகிறார்.

நமக்கு மரணபயம் உள்ளது. அதற்கு மருந்து தருகிறார் அருணைமாமுனிவர் :

**காலன் எனது ஆவிதனையே குறுகி வரும்போது**
**ஆதிமுருகா ஆதிமுருகா ஆதிமுருகா எனவும்**
**ஆதிமுருகா நினைவு தருவாயே.**

"வாழி; இனிப்பிறவாது நீ அருள்புரிவாயே" என்ற பிரார்த்தனை முத்தாய்ப்பாக அமைகிறது.

உயிர்களாகிய நம்மனோர்க் கெல்லாம் பற்றுக் கோடு முருகப்பெருமானைத் தவிர வேறு யாருளர்? நம்முடைய குற்றங்களையெல்லாம் பொறுத்து, தீவினைகளை யெல்லாம் காத்தருள வல்லவன் முருகனே யாவன். அப்பெருமானின் திருமுன்பு எய்தி, அவனுடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி வழிபடின், அப்பெருமான் "நோவ உரையான் நோவக்கண் பார்த்திடான்," தளரவிடாது நம்மைத் தண்ணளியோடு ஆட்கொண்டருள்வான்.

**"தீயவை புரிந்தாரேனும் குமரவேள் திருமுன்உற்றால்,**
**தூயவர் ஆகி மேலைத் தொல்கதி அடைவர் என்கை**
**ஆயவும் வேண்டும் கொல்லோ ?**

என்று கந்தபுராணம் அறிவுறுத்துகிறது.

17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த முருகன் அருள் பெற்ற மாமுனிவர் குமரகுருபர சுவாமிகள். திருச்செந்தூரில் ஊமை பேசிய அற்புதக் குழந்தை அவர். அவரது கந்தர் கலிவெண்பா அவர் வாய் திறந்து பேசிய முதற் சொல்லமுதம். அது கந்தபுராணசாரம். அதில் அவர் வேண்டுவது நாம் பிரார்த்தனை செய்வதற்காகவே!

பல்கோடி சன்மப்பகையும் அவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும்-பல்கோடி
பாதகமும் செய்வினையும் பாம்பும் பசாசும் அடற்
பூதமும் தீநீரும் பொருபடையும்-தீதகலா
வெவ்விடமும் துட்டமிருகம் முதலாம் எவையும்
எவ்விடமும் வந்தெம்மை எதிர்ந்தாலும்-அவ்விடத்தின்
பச்சை மயில் வாகனமும் பனிரண்டு திண்டோளும்
அச்சம் அகற்றும் அயில்வேலும்-கச்சைத்
திருவரையும் சீறடியும் செங்கையும் ஈராறு
அருள்விழியும் மாமுகங்கள் ஆறும்-விரிகிரணம்
சிந்தப்புனைந்த திருமுடிகள் ஓராறும்
எந்தத் திசையும் எதிர்தோன்ற-வந்திடுக்கண்
எல்லாம் பொடிபடுத்தி எவ்வரமும் தந்துபுகுந்து
உல்லாசமாக உளத்திருந்து-பல்கவியாம்
ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவதானமும்சீர்
பேசுமியல் பல்காப்பியத் தொகையும்-ஓசை
எழுத்துமுதலாம் ஐந்திலக்கணமும் தோய்ந்து
பழுத்த தமிழ்ப் புலமை பாலித்து-ஒழுக்கமுடன்
இம்மைப்பிறப்பில் இருவாதனை யகற்றி
மும்மைப் பெருமலங்கள் மோசித்து
ஆயும் பழைய அடியாருடன் கூடித்
தோயும் பரபோகம் துய்ப்பித்துச்-சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்டு
அடியேற்கும் முன்னின்று அருள்.

—*கந்தர் கலிவெண்பா* -(*111-122*)

முருக வழிபாட்டினை நினைக்கும்போது கந்தன் விரதங்களையும் சிந்திக்கிறோம்.

மனிதனைப் பரம்பொருளுடன் ஐக்கியப்படுத்துவதற்கு ஆன்றோர் கண்ட சிறந்த நெறிகளே விரதங்கள் எனப்படும். பரமனிடத்தில் பக்தி பூண்டு

தன்னைப் பக்குவப்படுத்திக் கொள்ள விரதங்களைப் போல ஒருவனுக்கு வேறு ஏதும் துணைபுரிவதில்லை. ''வரிக்கப்படுவது விரதம்'', ''உடலளவு விரதம்'', ''காப்பது விரதம்'' என்ற ஆன்றோர் வாக்குக்களைச் செல்லுத்தல் சிந்தித்தல் வேண்டும். புலன்களை துணையாகும் என்பர். ஆன்மாவின் வெற்றிக்கு உற்ற வீரமே வீரம் அல்லவா! புலனைந்தும் வென்றான்றன் வீரமே வீரம் அல்லவா! அடியார்களின் வீரம் எத்தகையது என்பதைக் கூற வந்த சேக்கிழார் சுவாமிகளும்

**ஆரம் கண்டிகை ஆடையும் கந்தையே**
**பாரம் ஈசன் பணியலது ஒன்றிலார்**
**ஈரநெஞ்சினர் யாதும் குறைவிலார்**
**வீரம் என்னால் விளம்பும் தகையதோ.**

—பெரிய புராணம்

எனப் பேசுகிறார்.

கந்தவேளை நினைக்கும்போது மூன்று வித விரதங்கள் நம் ஆய்வுக்கு வருகின்றன. 1. கந்தனைப் பெற விரதம் இருந்தோர், 2. கந்தன் மேற் கொண்ட விரதம் 3. கந்தனை அடைய நாம் மேற்கொள்ளும் விரதங்கள் என்பன.

கந்தன் அவதாரத்திற்காக வானவர் தவம் இருந் தார்கள். விரதம் இருந்தார்கள். அசுர ஆட்சியில் அவலமுற்று வருந்திய வானவர்கள் திருக்கயிலையில் முக்கட்சுடர்ப் பரம் பொருளைப் பரவி, தம் அல்லல் நீங்க அருள்புரிய வேண்டினர். சிவபெருமானும் அவர் களது குறைதீர ஒரு திருக்குமாரனை அருள திருவுள்ளம் கொண்டார். வானவர் விரதம் நிறைவேறியது. முருக வேளும் உதித்தனன் உலகம் உய்ய!

பல்கோடி சன்மப்பகையும் அவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும்-பல்கோடி
பாதகமும் செய்வினையும் பாம்பும் பசாசும் அடற்
பூதமும் தீநீரும் பொருபடையும்-தீதகலா
வெவ்விடமும் துட்டமிருகம் முதலாம் எவையும்
எவ்விடமும் வந்தெம்மை எதிர்ந்தாலும்-அவ்விடத்தின்
பச்சை மயில் வாகனமும் பனிரண்டு திண்டோளும்
அச்சம் அகற்றும் அயில்வேலும்-கச்சைத்
திருவரையும் சீறடியும் செங்கையும் ஈராறு
அருள்விழியும் மாமுகங்கள் ஆறும்-விரிகிரணம்
சிந்தனைப்புனைந்த திருமுடிகள் ஓராறும்
எந்தத் திசையும் எதிர்தோன்ற-வந்திடுக்கண்
எல்லாம் பொடிபடுத்தி எவ்வரமும் தந்துபுகுந்து
உல்லாசமாக உளத்திருந்து-பல்கவியாம்
ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவதானமும்சீர்
பேசுமியல் பல்காப்பியத் தொகையும்-ஓசை
எழுத்துமுதலாம் ஐந்திலக்கணமும் தோய்ந்து
பழுத்த தமிழ்ப் புலமை பாலித்து-ஒழுக்கமுடன்
இம்மைப்பிறப்பில் இருவாதனை யகற்றி
மும்மைப் பெருமலங்கள் மோசித்து
ஆயும் பழைய அடியாருடன் கூடித்
தோயும் பரபோகம் துய்ப்பித்துச்-சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்டு
அடியேற்கும் முன்னின்று அருள்.

*—கந்தர் கலிவெண்பா -(111-122)*

*முருக வழிபாட்டினை நினைக்கும்போது கந்தன் விரதங்களையும் சிந்திக்கிறோம்.*

*மனிதனைப் பரம்பொருளுடன் ஐக்கியப்படுத்துவதற்கு ஆன்றோர் கண்ட சிறந்த நெறிகளே விரதங்கள் எனப்படும். பரமனிடத்தில் பக்தி பூண்டு*

தன்னைப் பக்குவப்படுத்திக் கொள்ள விரதங்களைப் போல ஒருவனுக்கு வேறு ஏதும் துணைபுரிவதில்லை. "வரிக்கப்படுவது விரதம்", "உடலளவு விரதம்", "காப்பது விரதம்" என்ற ஆன்றோர் வாக்குகளைச் சிந்தித்தல் வேண்டும். புலன்களை வெல்லுதலே ஆன்மாவின் வெற்றிக்கு உற்ற துணையாகும் என்பர். புலனைந்தும் வென்றான்றன் வீரமே வீரம் அல்லவா! அடியார்களின் வீரம் எத்தகையது என்பதைக் கூற வந்த சேக்கிழார் சுவாமிகளும்

**ஆரம் கண்டிகை ஆடையும் கந்தையே**
**பாரம் ஈசன் பணியலது ஒன்றிலார்**
**ஈரநெஞ்சினர் யாதும் குறைவிலார்**
**வீரம் என்னால் விளம்பும் தகையதோ.**

—பெரிய புராணம்

எனப் பேசுகிறார்.

கந்தவேளை நினைக்கும்போது மூன்று வித விரதங்கள் நம் ஆய்வுக்கு வருகின்றன. 1. கந்தனைப் பெற விரதம் இருந்தோர், 2. கந்தன் மேற் கொண்ட விரதம் 3. கந்தனை அடைய நாம் மேற்கொள்ளும் விரதங்கள் என்பன.

கந்தன் அவதாரத்திற்காக வானவர் தவம் இருந்தார்கள். விரதம் இருந்தார்கள். அசுர ஆட்சியில் அவலமுற்று வருந்திய வானவர்கள் திருக்கயிலையில் முக்கட்சுடர்ப் பரம் பொருளைப் பரவி, தம் அல்லல் நீங்க அருள்புரிய வேண்டினர். சிவபெருமானும் அவர்களது குறைதீர ஒரு திருக்குமாரனை அருள திருவுள்ளம் கொண்டார். வானவர் விரதம் நிறைவேறியது. முருகவேளும் உதித்தனன் உலகம் உய்ய!

முருகவேள் தமது பெற்றோரை வழிபடும் விரதம் உடையவர். 'வேளூர்' எனவரும் தலங்கள் அனைத்தும் முருகவேள் சிவபெருமானை வழிபட்டவையாகும். கீழ்வேளூர், புள்ளிருக்குவேளூர், பெருவேளூர், என வரும் தலங்கள் இதற்குச்சான்றாகும். சேய்ஞலூர், என்ற தலமும் முருகவேள் சிவபெருமானை வழிபட்ட தலம் என்பதைச் சண்டீசர் புராணத்தில் சேக்கிழார் காட்டுகின்றார்.

**பூந்தண் பொன்னி எந்நாளும் பொய்யாதளிக்கும் புனல் நாட்டு**
**வாய்ந்த மண்ணிற் தென்கரையில் மன்ன முந்நாள் வரை திறிய**
**ஏந்து மயில் வேல் நிலைகாட்டி இமையோர் இகல்வெம் பகைக்கடக்கும்**
**சேந்தன் அளித்த திருமறையோர் மூதூர் செல்வச் சேய்ஞலூர்**

இனி, கந்தனை அடைய நாம் மேற்கொள்ள வேண்டிய விரதங்களைக் காண்போம். அவை வார விரதம், நாள்விரதம், பட்சவிரதம் என்று மூவகைப் படும்.

**வாரவிரதம் :** இது வெள்ளிக்கிழமை விரதம் ஆகும். ஐப்பசி மாதத்தில் முதல் வெள்ளிக்கிழமை தொடங்கி, பிரதி வெள்ளிக்கிழமையிலும் மேற்கொள்ளும் விரதம் இது. அந்நாளில் அதிகாலையில் புண்ணிய நன்னீராடி முருகப்பெருமானை முறையாக வழிபடல் வேண்டும். தூய்மையான இடத்தில் நெல்லைப் பரப்பி, கலசத்தில் நீர் வைத்து, மாவிலை, தருப்பை, கூர்ச்சம், மாலை, ஆடை முதலியவற்றால் அலங்கரித்து, கந்தனின் திருவுருவத்தை அதன்மீது எழுந்தருளச் செய்து விதிப்

படி பூசிக்கவே வேண்டும். மாலையில் திருக்கோயிலில் முருகவேளை வழிபட்டு, அங்கே நிவேதித்த பழம் முதலியவற்றையே உண்ணவேண்டும். மறுநாள் காலையில் நீராடி, முறைப்படி கும்பத்தையும் முருகன் பிம்பத்தையும் வழிபட்டு அவற்றை அந்தணருக்குத் தானம் செய்ய வேண்டும. காலை ஒன்பது நாழிகைக் குள்ளாக அடியார்களுடன் பாரணை செய்தல் வேண்டும். இவ்வாறு ஒவ்வொரு வெள்ளிக்கிழமை யிலும் செய்து வரவேண்டும். இவ்விரதத்தைச் சித்திரை மாதத்து முதல் வெள்ளிக்கிழமை தொடங்கிச் செய்வதும் உண்டு.

பகீரதன் என்னும் மன்னன் அரசாண்டு வரும் நாளில் கோரன் என்னும் அசுரன் வலிமை பெற்று பகீரதனது ஆட்சியைக் கவர்ந்து கொண்டான். பார்க்கவ முனிவர் பகீரதனது நிலைக்கு இரங்கி,

"வேற்கரன் மகிழும் ஆற்றல் வெள்ளிநாள் விரதம் தன்னை நோற்குதி மூன்றியாண்டு நுங்களுக்கு அல்லல் செய்த மூர்க்கனும் முடிவன் நீயே முழுதுல காள்வை......"

என்று உபதேசித்தார். இவ்வாறு பகீரதன் வெள்ளிக் கிழமை விரதம் ஏற்று மூன்றாண்டுகள் நோற்று கந்தன் கருணையால் மீண்டும் அரசாட்சி எய்தி இன்புற்றான் என்று கந்தபுராணம் பேசும்.

வெள்ளிக்கிழமை விரதச் சிறப்பினை வசிட்ட மாமுனிவர் முசுகுந்த மன்னனுக்குக் கூறுகிறார்.

**என்னரும் சிறப்பின் மிக்க எழுவகை வாரம் தன்னுள்**
**வெள்ளிநாள் விரதம் தானே விண்ணவர் உலகம் காத்த**
**வள்ளல்தன் விரதம் ஆகும் மற்றது புரிந்த மேலோர்**
**உள்ளமேல் நினைந்த எல்லாம் ஒல்லையில் முடியும் அன்றே.**

*—கந்தபுராணம்*

உள்ளத்தில் நினைத்ததை அள்ளி வழங்கும் கருணை வள்ளலின் வெள்ளிக்கிழமை விரத மாண்பினை விரிக்கிற் பெருகும்.

**நாள் விரதம் : கார்த்திகை விரதம்:** கார்த்திகை மாதக் கார்த்திகை நாள் தொடங்கி ஒவ்வொரு மாதக் கார்த்திகை நாளும் விரதம் இருப்பது. இவ்வாறு பன்னிரண்டு ஆண்டுகள் அநுட்டிக்க வேண்டிய விரதம் இது. கார்த்திகைக்கு முதல் நாள் நண்பகல் மட்டுமே உணவருந்த வேண்டும். கார்த்திகையன்று பூரண உண்ணு நோன்பு இருத்தல் வேண்டும். மறுநாட்காலை ஒன்பது நாழிகைக்குள் உணவருந்த வேண்டும். கார்த்திகை நாளில் விதிப்படி முருகவேளை வழிபடல் வேண்டும்.

இவ்விரதத்தை அநுட்டித்ததாலேயே நாரத முனிவர் மேலான பதவிபெற்றுர். இவ்விரதச் சிறப்பினை விநாயகப் பெருமானே நாரத முனிவருக்கு எடுத்துரைத் தருளினுர் என்று கந்தபுராணம் கூறும்.

**முன்னவன் அதனைக் கேளா முழுதருள் புரிந்து நோக்கி**
**அன்னது பெறுதி திண்ணம் ஆறுமா முகத்து நம்பி**
**பொன்னடி வழிபா டாற்றிப் பொருவில்கார்த் திகைநாள் நோன்மைப்**
**பன்னிரு வருடங்காறும் பரிவுடன் புரிதி என்ருன்.**

**இப்படி ஆரல் நாளில் விரதத்தை இயல்பின் தோற்று**
**முப்புவ னத்தில் வேண்டும் முறைமையை அடைந்த நீரார்**
**மெய்ப்படு தொகையை யாரே விளம்புவார்...**

என்று கந்தபுராணம் இவ்விரதத்தைப் போற்றுகின்றது.

இவ்விரதம் மேற்கொள்வோர் ஒரு கைத் தண்ணீரையே அருந்துதல், தருப்பையில் படுத்தல், கந்தபுராணம் படித்தல், கேட்டல், உறங்காது விழித்து இறைவனைச் சிந்தித்தல் ஆகியவற்றைத் தவறாது கொண்டொழுகுதல் வேண்டும்.

ஓர் அந்தணன் இவ்விரதமிருந்து மனு மன்னனுன். கார்த்திகை விரதம் நோற்றுக் கந்தனின் கருணைக்கு இலக்காகி இன்றும் பலர் இன்பம் அடைகின்றார்கள்.

பட்ச விரதம் : சஷ்டி விரதம் : கந்த விரதங்களுள் மிகச் சிறப்புடையது சஷ்டி விரதம். இவ்விரதத்தை மனத்துட் கொண்டே "சட்டியிலிருந்தால் அகப்பையில் வரும்" என்ற பழமொழியும் எழுந்தது. சஷ்டி விரதம் இருந்தால் நற்புத்திரப் பேறு கிட்டும் என்பது இதன் பொருள். சஷ்டி விரதம் இருந்தால் நம் உள்ளத்தில் இறைவன் குடி கொள்வான் என்று பொருள் கொள்ளல் அதனினும் சிறப்புடையதாம். இதய குகையில் வீற்றிருப்பவன் தானே குகன்

கந்த சஷ்டியாகிய ஐப்பசி மாத சுக்கில பட்ச சஷ்டி முதல், ஓராண்டில் வரும் 24 சஷ்டிகளிலும் இவ்விரதம் அநுட்டிக்கப்பட வேண்டும். கந்த சஷ்டி நன்னளுக்கு முன் வரும் பிரதமை முதல் ஆறு நாட்களும் உமிழ் நீரும் உள்ளே விழுங்காதவாறு நோன்பிருந்து இவ்விரத்தை அநுட்டிப்பது ஒரு முறை. அவ்வாறு

இயலாதவர்கள் அந்நாட்களில் ஒரு முறை வீதம் ஆறு மிளகையும் ஆறுகை நீரையும் அருந்தலாம்.

உயிர் உணர்ச்சி வளர்க்கும் விரதம் இது. உண்ணு விரதம் இருப்போர் போன்று உப்பு நீர், எலுமிச்சம் பழச்சாறு, நாரத்தம் பழச்சாறு, இளநீர் முதலிய வற்றை இவ்விரதமிருப்போர் அருந்தக் கூடாது.

இவ்விரத நாட்களில் விடியற்காலையில் எழுந் திருந்து, நாட்கடன்களை முடித்து, திருநீறணிந்து முருகவேளைத் தியானித்துப் பின் நீராடி, தோய்த் துலர்ந்த இரு ஆடைகளை அணிந்து, தம்பத்திலும், விம்பத்திலும், கும்பத்திலும் முருகவேளை வழிபட்டு இரவில் நெய்யிற் சமைத்த மோதகத்தை நிவேதித்துப் பூசிக்க வேண்டும். ஏழாம் நாட்காலை விதிப்படிப் பூசித்துக் கந்தன் அடியார்களுடன் அமர்ந்து பாரணை செய்தல் வேண்டும் என்று கந்த புராணம் விதிக் கின்றது.

**முந்திய வைகல் ஆதி மூவிரு நாளும் காலை**
**அந்தமில் புனலில் மூழ்கி ஆடைஓர் இரண்டு தாங்கிச்**
**சந்தியில் கடன்கள் செய்து தம்பவிம்பங் கும்பத்தில்**
**கந்தனை முறையே பூசை புரிந்தனர் கங்குல் போதில்.**

**நிறைதரு கட்டி கூட்டி நெய்யினால் சமைக்கப்பட்ட**
**குறைதவிர் மோதகத்தைக் குமாரநாயகர்க்கு அருத்திப்**
**புறவுள விதியும் செய்து பிரான்திருப் புகழ் வினவி**
**உறுபுனல் சிறிது மாந்தி உபவசித் திருந்தார் மாதோ.**

கந்தவேள் சூரபத்மனை வெற்றி கொண்ட நாளே கந்த சஷ்டி. நமது உள்ளத்தில் ஆட்சி செய்து வாழும் காமம் முதலிய சூரபதுமனை முருகவேளின் ஞான வேலினால் அழித்து ஞான வெற்றி கொண்டு வாகை

சூடிப் பேரின்பம் எய்தும் குறிப்பே சூரசம்ஹாரத்தின் திருவருட் பொருளாகும். அதற்குரிய ஆன்மீக வீரம் பெற உதவுவதே கந்த சஷ்டி விரதமாகும். இவ்விரதம் இருப்போர் பெரும்பயன் பெரும்பயனும். இதன் சிறப்பினை,

**......அயன் அறியா அருமறை மூலந்தெரிந்த**
**ஏகநாயன் விரதம் எவரேனும் போற்றிடில்**
**ஒகையால் நினைத்த எலாம் ஒல்லைதனில் பெற்றிடுவர்**
**மாகமேல் இமையவரும் வந்தவரை வணங்குவரே.**

என்று கந்த புராணம் சாற்று கின்றது.

விசாக விரதம் : விசாக விரதம் என்று ஒரு விரதம் உண்டு. முருக வேளின் திருஅவதாரத் திருநாள் வைகாசி விசாகம். விசாக விஜயம் என்ற நூலில் இது பற்றிய குறிப்புகளைக் காணலாம்.

முருகவேளை வழிபட்டு விரதமிருப்போர் கொண்டிருந்த நியமத்தினை,

**சீரை தைஇய உடுக்கையர்**
**மாசற இமைக்கும் உருவினர்**
**ஊன் கெடு மார்பினர்**
**என்பு எழுந்து இயங்கும் யாக்கையர்**
**நண்பகல் பலவுடன் கழிந்த உண்டியர்**
**இகலொடு செற்றம் நீக்கிய மனத்தினர்**
**இடும்பை யாவதும் அறியா இயல்பினர்**

என்று திருமுருகாற்றுப்படையில் காட்டுகிறார் நக்கீரனார்.

"பெருங்காரியம் போல்" என்று தொடங்கும் திருப்புகழில் அருணகிரிநாத சுவாமிகள் யாக்கை

நிலையாமையை நன்கு காட்டுகின்றார். அதனை உணர்ந்துவிட்டால் விரதங்களை மேற்கொண்டொழுகி ஆன்ம முதலீட்டைப் பெருக்கிக் கொள்ளலாம். கோடைநகர் திருப்புகழில் "சூழ் விரதங்களை கடிந்த குண்டர்கள்" என்று விரதங்களை நிந்திப் போரைச் சாடுகிறார் அருணை வள்ளல். விரதம் மேற்கொள்ளாதவர் நரகமே அடைவர் எனவும், விரதம் அநுட்டியாதவரோடு உறவு கொள்ளற்க எனவும் வடலூர் இராமலிங்க வள்ளலும் அறிவுறுத்துகின்றார்.

விரதங்களாகிய ஞான வேள்வியை நாம் தவறாது அநுட்டித்தல் வேண்டும்.

முருக வழிபாடு சங்க காலத்தில் எவ்வாறு இருந்தது என்பதைப் பட்டினப்பாலை வரிகள் காட்டுகின்றன; அங்கே ஆரவாரம் மிகுந்திருக்கும்; குழல் அகவும்; யாழ் முரலும்; முழவு அதிரும்; முரசு இயம்பும்.

**செறி தொடி முன்கை கூப்பிச் செவ்வேள்**
**வெறியாடு மகளிரொடு செறியத்தாஅய்க்**
**குழல் அகவ யாழ் முரல**
**முழவதிர முரசியம்ப**
**வழவுறு வியலாவணத்து...**

(—பட்டினப்பாலை. 154-58)

தமிழகத்தில் முருக வழிபாடு காவடி எடுத்தல், பாற்குடம் எடுத்தல், முதலிய வைபவங்களுடன் இன்றும் சிறப்பாக நடைபெறுவது கண்கூடு பால், பஞ்சாமிர்தம், தேன், தயிர் முதலிய அபிஷேகங்களும் முருகனுக்கு உகந்தவை.

முருகனுக்குரிய மந்திரங்கள் பல. அவற்றுள்ளும் "குமாராயநம", "சரவணபவ", "முருகா" என்பவ குறிப்பிடத்தக்கவை.

முருகப் பெருமான் உவந்து விளங்கும் தலங்கள்எண்ணற்றன. அவற்றுள்ளும் திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் நமக்கு ஆறு தலங்களை ஆற்றுப்படுத்து கின்றார். சங்க காலந்தொட்டே இந்த ஆறு தலங்களும் சிறப்புடன் திகழ்ந்து வருகின்றன. அவற்றைப் படை வீடுகள் என்று கூறுவது தவறு. அவை படை வீடு களும் அல்ல; பாடி வீடுகளும் அல்ல. ஆன்மாவை முருகன் பால் ஆற்றுப்படுத்தும் தலங்கள். முருகனே தனது கருணையால் ஆன்மாக்களைத் தன்பால் ஆற்றுப் படுத்தும் தலங்கள் அவை. நமது உடலில் ஆறு ஆதாரங்கள் உள்ளன. அவற்றைத் தலமெனக் கொள்ளின் ஆறு தலங்களின் சிறப்பு நன்கு புலப்படும். நக்கீரர் காட்டிய வரிசையிலேயே கந்த புராணக் கடவுள் வாழ்த்தும் ஆறு தலங்களைப் போற்று கின்றன. அருணகிரிநாத சுவாமிகள் அந்த ஆறு தலங் களையும் ஆறு திருப்பதி என்றே போற்றுகிறார். அவை வருமாறு.

1. திருப்பரகுன்றம்
2. திருச்செந்தூர்
3. திருஆவினன்குடி
4. திருவேரகம்
5. குன்றுதோறாடல்
6. பழமுதிர் சோலை.

## 1. திருப்பரங்குன்றம்

**சுடர்ஒடு சூழ்வரு தாரகை மேருப்**
**புடைவரு சூழல் புலமாண் வழுதி**
**மடமயி லோரு மனையவ ரோடும்**
**கடனறி காரியக் கண்ணவ ரோடுநின்**

**சூருறை குன்றில் தடவரை யேறி...........**
**..........................................அனைத்தே**
**.......... ..... .....................நீமேய**
**கடிநகர் சூழ் நுவலுங் கால்**

—பரிபாடல் (19-23; 28-29)

என நப்பண்ணனாரின் பத்தொன்பதாவது பாடல் திருப்பரங்குன்றத்துத் திருக்கோயிலைக் காட்டுகின்றது. பாண்டிய மன்னன் வலம் வந்து முருகவேளை இக்கோயிலில் வணங்குவது இப்பாடலில் காட்டப் பெறுகிறது.

கழுத்தில் நஞ்சாகிய மறுவினை உடைய சிவபெருமானுக்குக் குற்றமற்ற உமையாள் பயந்த முருகன் கடம்பமரத்தில் இனிது உறைவதையும், அவனது காவலையுடைய திருக்கோயிலைத் தம்முன் பிரியாது மகிழும் காதலரும், ஏனையோரும் வணங்கித் தொழுகின்றதைப் பரிபாடல் எட்டாம் பாடலில் நல்லந்துவனார் நம்முன் காட்டுகிறார்.

**"......................பரங்குன்றைச்**
**சித்தமது ஒன்றிச் செங்கழல் உன்னிச் சிவனென்று**
**நித்தலு மேத்தத் தொல்வினை நம்மேல் நில்லாவே"**

என்று திருஞானசம்பந்தர் போற்றும் திருப்பரங் குன்றம், அதன் பெயர்க் காரணத்தையும் விளக்கி நிற்கிறது. இக்குன்றே சிவனாகப் போற்றி வணங்கப் பட்டது என்பது புலப்படும், இக்குன்று பரமனாக வழிபடப் பெற்றமையால் பரமன்குன்று எனப் பெயர் கொண்டு, தென்திசையில் உள்ளதாலும் அழகான தோற்றம் கொண்டதாலும் தென் பரமன் குன்று என்று பெயர் பெற்றிருக்கலாம். காலப்போக்கில் இப்பெயர் மருவி தென்பரங்குன்றம் என்றாகிவிட்டது போலும்!

திருப்பரங்குன்றின் இயற்கை வளத்தினைத் திருமுருகாற்றுப்படையில்,

**"இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கள்கமழ் நெய்தல் ஊதிஎல்படக்
கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்று"........................**

திருப்பரங்குன்றில் தேவர்கோன் மகளாகிய தெய்வ யானையை முருகவேள் திருமணம் புரிந்து கொண்டார் என்பர். அதற்கு ஏற்ப இத்தலத்தில் முக மண்டபத் தூண் ஒன்றில் திருவுருவம் அமைந்துள்ளது. ஆனால், பரிபாடல் ஆசிரியர் நப்பண்ணனார்;

**"அருமுனி மரபின் ஆன்றவர் நுகர்ச்சிமன்
இருநிலத் தோரும் இயைக என ஈத்தநின்
தண்பரங் குன்றத்து இயலணி நின்மருங்கு
சாறுகொள் துறக்கத்து அவளொடு
மாறுகொள் வதுபோலும் மயில் கொடி வதுவை"**

என்று வள்ளியை முருகன் மணந்த பதியாகத் திருப்பரங்குன்றத்தினைக் காட்டுகிறார்.

திருப்பரங்குன்றத்துக் குடைவரைக் கோயில் பாண்டியப் பேரரசன் "கொன்னவில் கூர்வேற்கோன் நெடுமாறன் தென் கூடற்கோன்" என்று பெரியாழ்வாரால் சிறப்பிக்கப் பெற்ற சடிலிவர்மன் நெடுஞ் சடையன் பராந்தகன் (கி.பி. 765-790) காலத்ததாகும். கருவறையின் பின் சுவரில் சோமாஸ்கந்த வடிவம் காணப்படுவது தனிச் சிறப்பாகும். மூன்று கருவறை களில் முருகன், கொற்றவை, விநாயகர் விளங்கு

கின்றனர். இம்மூன்றுக்கும் இருமங்கும் உள்ள கருவறைகளில் திருமாலும் சிவபெருமானும் எழுந்தருளியுள்ளனர். திருமால் கருவறையை ஒட்டிய பாறையில் உக்ரநரசிம்மர், வைகுந்தநாதன், வராகப் பெருமாள் புடை சிற்பங்கள் உள்ளன. இலிங்கத் திருவுருவக் கருவறையை ஒட்டிய பாறையில் மாதொரு பாகன், ஆடல் வல்லான் புடைசிற்பங்கள் உள்ளன.



முருகன் கருவறையில் உள்ள மூன்று வடிவங்களில் நடுவில் உள்ளது முருகன் என்றும், வலப்புறம் விளங்குவது தெய்வயானை எனவும், இடப்புறம் நாரதர் உள்ளார் எனவும் கூறுவர். ஆகவே தெய்வயானையை முருகன் திருமணம் செய்து கொண்ட திருத்தலம் இது என்பது பெறப்படுகிறது.

பரங்குன்று இமயக்குன்றம் நிகர்க்கும்

—*பரிபாடல் 8-11*

ஒன்னுதார்க் கடந்தடுஉ முரவுநீர் மாகொன்ற
வென் வேலான் குன்றின்மேல் விளையாட்டும்

—கலித்தொகை. 27

சூர்மருங்கறுத்த சுடரிலை நெடுவேல்
சீர்மிகு முருகன் தன்பரங்குன்றத்து
அந்துவன் பாடிய சந்துகெழுநெடுவரை

அகநானூறு 59- 10-12

....................கூடற் கூடாது
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய
ஒடியா விழவின் நெடியோன் குன்றத்து.

அகநானூறு. 149-15-16

வன்கை வினைநர் அரிபறையின்குரல்
அனிமழை பொழியும் தண்பரங்குன்றில்.

—மதுரைக்காஞ்சி. 262-3

எனவரும் சங்கநூல்களில் திருப்பரங்குன்றச் சிறப்பினைக் காணலாம்.

சங்கத்தமிழ்க்கடலாம் செந்தமிழ்க்கருணை வள்ளல் அருணகிரிநாத சுவாமிகளின் திருப்புகழில் இத்தலம் போற்றப்படுவது முருகன் அடியார்கள் பயின்று இன்புற வேண்டியதாகும்.

"மதியுங் கதிருந் தடவும்படி
உயர்கின்ற வனங்கள் பொருந்திய
வளமொன்று பரங்கிரி"

"செழித்த தண்டலை தொறும் இலகியகுட
வளைக்குலந்தரு தரளமு மிகும்உயர்
திருப்பரங்கிரி"

"சீதள முந்தும ணந்தயங் கும்பொழில்
சூழ்தர விஞ்சைகள் வந்து இறைஞ்சும்பதி
தேவர் பணிந்து எழும்தென் பரங்குன்றம்"

—திருப்புகழ்

## 2. திருச்செந்தூர்

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனை வாழ்த்த விரும்பிய மருதன் இளநாதனுர் என்னும் புலவர் திருச்செந்தூரில் கடல் அலைகளால் மோதப்படுவதும் முருகவேள் எழுந்தருளியிருப்பதுமாகிய திருக்கோயிலின் முன்னுள்ள கடற்றுறையில் கடுங்காற்றுல் திரட்டித் தொகுக்கப் பெற்ற மணலை விடப் பல்லாண்டு காலம் வாழ்க என வாழ்த்துகிறுர் பாருங்கள் :

நீ நீடுவாழிய நெடுங்தொகை தாழ்நீர்
வெண்டலைப் புணரி யலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறைக்
கடுவளி தொகுப்ப வீண்டிய
வடுவாழ் எக்கர் மணலிலும் பலவே.

—புறநானூறு. 55 : 17-21

அலைவாய் என்று போற்றப்படுகிறதுதிருச்செந்தூர்.

திருமணி விளக்கின்அலைவாய்ச்
செருமிகு சேஎயொடுற்ற சூளே

என்று அகநானூறு (266) பேசுகிறது. நக்கீரரும் திருமுருகாற்றுப்படையில் சீரலைவாயின் சிறப்பினைப் போற்றுகிறுர்.

"நம் செந்தில்மேய வள்ளிமணாளர்க்குத்
தாதைகண்டாய்"

என்று திருநாவுக்கரசர் திருமறைக்காடு திருத்தாண்டகத்தில் காட்டுகிறார்.



"பாவையர் பரிந்துதாங்கும்
பனிமலர் செறிந்த செந்திற்கோ"

என்பது நந்திக்கலம்பகம்.

திருச்செந்தூர் திருக்கோயிலின் கருவறையில் பாலசுப்பிரமணியன் என்றும் மாறா இளமைக்கோலத்துடன் "என்றும் இளையாய் அழகியாய்" என்ற சிறப்புடன் விளங்குகிறார். திருச்சுற்றில் இரு கோடியில் வள்ளியம்மைக்கும் தெய்வயானைக்கும் தனித்தனி சந்நிதிகள் உள்ளன. அடுத்த திருச்சுற்றில் முருகன் சூர்மா தடிந்த சுதைக் கோலம் உள்ளது. வடக்குத் திருச்சுற்றில் நெடியமால் செந்தில் கோவிந்தனாகப் பள்ளிகொண்டுள்ளார்.

தாரகனை வென்று கிரௌஞ்சமலையைப் பிளந்த பின், சூரனை மாய்க்க வேண்டி திருச்செந்தூரில் முருகவேள் பாசறை அமைத்தார். சூரனைக் கொன்றார். ஆகவே சூரசம்ஹார விழா திருச்செந்தூரில் தனிச்சிறப்புடையதாகும்.

இத்தலத்தில் பெரும்பாலும் திருவிழா நாட்களில் குமாரவிடங்கர், ஐயந்திநாதர், அலைவாயுகந்த பெருமான் என்னும் உற்சவ மூர்த்திகள் திருவீதி உலா நிகழும். ஆவணிப் பெரு விழாவிலும் மாசிப் பெரு விழாவிலும் 7-ஆம் நாள் மட்டும் ஷண்முகர் வீதி உலா நிகழும்.

இங்கு உள்ள குமரவிடங்கப் பெருமான் வில்லேந்திய வேலன் ஆவார். நாற்கரங்கள் கொண்ட இத்திருவடிவத்தில் இருவலக்கரங்களிலும் அம்பும் சக்திவேலும் விளங்க, இடக்கரங்களில் வில்லும் வச்சிரப் படையும் திகழ இவர் விளங்குகிறார். வள்ளியம்மை, தெய்வயானையம்மை திருமணங்களுக்கு இவரே எழுந்தருளுவதால் இவரை மாப்பிள்ளை சுவாமி என்றழைப்பர். இத்திருவுருவம் கி. பி. 1648 - க்குப் பின்னரே அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். முன்பிருந்த குமரவிடங்கர் சிலையை கி.பி. 1648 ல் இத்திருக் கோயிலில் கொள்ளையிட்ட உலாந்தர்கள் (டச்சு) பூம்புகார்க் கடற்கரையில் போட்டுவிட்டனர். காவிரிப் பூம்பட்டினந்தருகிலுள்ள திருச்சாய்க்காட்டில் இத் திருவுருவம் வில்லேந்திய வேலன் என்னும் பெயரோடு இன்றும் திகழ்கிறது (இவ்வடிவ அமைப்பை விரிவாக முந்தைய பகுதியில் பக்கம் 67-ல் காணலாம்)

அலைவாயுகந்த பெருமான் திருச்செந்தூரில் ஆதியில் அமைந்த மூலவரின் பிரதிபிம்பம் ஆவார்.

தற்போதுள்ள மூலவருக்கு மாறுபட்ட அமைப்பில் இவர் திகழ்வதைக் காணலாம். அலைவாயு கந்த பெருமானது நாற்கரங்களிலும் முறையே அபயம், சக்தி, வரதம், வஜ்ரம் விளங்குகின்றன. இவரும் மூலவர் போலவே தேவியரின்றி விளங்குகிறார். இவரைத் தோழன் சாமி எனவும் அழைப்பர். (இவ்வடிவ அமைப்புகளைப் பற்றி விரிவாக ''அருணகிரிநாதர் அடிச்சுவட்டில் திருப்புகழ் தலப்பயணம்'' என்னும் நூலில் காண்க)

ஆறுமுகன் (ஷண்முகர்) திருவடிவமும் உலாந்தர்களால் 1648 ல் எடுத்துச் செல்லப்பட்டபோதும் சிலையுடன் சென்ற கப்பல் மூழ்கத் தொடங்கியதால் உலாந்தர்கள் சிலையைக் கடலில் எறிந்து விட்டனர். நாயக்க மன்னரின் பிரதிநிதியான வடமலையப்பபிள்ளை 'கனவில் ஆறுமுகன் தோன்றி, கடலில் தான் இருக்கும் இடத்தைக் காட்டியருளினார். அவர் கடலுள் இருந்த இடத்தில் எலுமிச்சம் பழம் மிதந்து கொண்டிருந்தது. அங்கு மூழ்கிப் பார்த்ததில் ஆறுமுகனின் வடிவம் கிடைத்தது. புதிய மண்டபம் அமைத்து ஆறுமுகனை எழுந்தருளச் செய்தனர். அந்த மண்டபமே இன்று வடமலையப்பன் மண்டபம் என அழைக்கப்படுகிறது.

''வளரும் வாழையும் மஞ்சளும் இஞ்சியும்
இடைவிடாது நெருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்தில்''
''சிகர கோபுரத் தினுமதி லினுமேற்
செம்பொற் கம்பத் தளமீதும்
தெருவி லேயு நித்திலம் எறி அலைவாய் செந்தில்''

என்றெல்லாம் அருணகிரிநாதர் இத்தல வளத்தைப் போற்றுகிறார்.

"செந்திலை உணர்ந்து உணர்ந்து" வழிபட்டு உய்ய வேண்டும் என்று அருணகிரிநாதர் அறிவுரை.

## 3. திருஆவினன்குடி



திருஆவினன்குடியும் பழனியும் ஒன்றாகவே போற்றப்படும் இருதலங்களாகும். மலை மீதுள்ள தலம் பழனி. கீழே அடிவாரத்தில் விளங்குவது திருஆவினன்குடி. வாவி என்பதற்குப் பொய்கை எனப்பொருள் கொண்டு, திருவாவினன்குடி என்றால் அழகிய பொய்கை உடைய நல்ல குடி உள்ள ஊர் என்று கொள்ளலாம். திரு+ஆ+இனன்+குடி எனக்கொண்டால் திருமகளும் காமதேனுவும் அக்கினியும் வழிபட்ட தலம் என்று பொருள்படும். அருகில் உள்ள பழனித் திருத்தலம் ஒரு பேருண்மையைப் புலப்படுத்தும் தலமாகும். ஞானப் பழமாக விளங்குபவன் முருகன் அல்லவா? சிவபெருமானும் உமையம்மையும் "பழம் நீ" என முருகனை அழைத்த தலம் இது!

மயிலுக்குப் போர்வையை நல்கிய "ஆவியர் பெரு மகன் பெருங்கல் நாடன் பேகனின்" (சிறுபாணாற்றுப் படை 86-7) பொதினி என்னும் மலையே பழனியென மருவியுள்ளதாக அறிஞர் கூறுவர்.

"அருந்திறற் கடவுள் காக்கும் உயர்சிமைப்
பெருங்கல் நாடன் பேகன்" (புறம் : 158)

என்று பெருஞ்சித்திரனார் கூறும் வரிகள் ஒருண்மையைப் புலப்படுத்தும். வீரத்திற்குக் கடவுளாகிய முருகன் காக்கும் உயர்ந்த சிகரங்களைக் கொண்ட பொதினிமலை நாட்டின் தலைவன் பேகன் என்பதால் சங்க காலத்தில் பழனியில் முருகனது திருக்கோயில் இருந்தமை புலப்படும்.

பழனியில் தண்டபாணியாக விளங்கும் முருகவேள் திருவுருவம் பதினெண் சித்தர்களுள் ஒருவரான போக நாதரால் நவபாஷாணத்தால் செய்யப் பெற்றதாகும். கோயிலின் உள் திருச்சுற்றில் போகரின் சமாதியும் உள்ளது. மண்ணுலகில் வாழ்வோருக்கு வேண்டியவற்றை வேண்டியவாறு நல்கும் இறைவனும் உலகப் பொருள்களில் பற்று அற்றவனாக இருக்கிறான் என்பதையே பழனியாண்டவனின் துறவுக் கோலம் காட்டும்.

"பணியும் அடியார் சிந்தை மெய்ப்பொருள் தாகநவில்
சரவணபவா வென்று வற்கரமுமாகி வளர்
பழநிமலை மேல் நின்ற சுப்பிரமணியா அமரர்
பெருமானே"

என்று அருணகிரியார் நூறு திருப்புகழ் பாடல்களில் பழநி முருகனை பாடிப் பாடி மகிழ்கிறார்.

## 4. திருவேரகம்

"வெண்குன்றும் ஏரகமும்" என்று சிலப்பதிகாரம் பேசும் இரு தலங்கள் திருவேரகம் பற்றிய ஆய்வுக்குத் துணை புரியும். நச்சினார்க்கினியர் ஏரகம் என்பது மலைநாட்டிலுள்ள ஒருதலம் என்று உரை எழுதியுள்ளார். சிலம்புக்கு உரை எழுதிய அரும்பதவுரையாசிரியர் வெண்குன்றம் என்பதைச் சுவாமிமலை என்று குறிப்பிடுகிறார். ஆனால் அருணகிரிநாத சுவாமிகள்



"ஏரகவெற்பு எனும் அற்புதமிக்க
சுவாமிமலைப்பதி"

என்று திருப்புகழ்பாடி ஏரகமே சுவாமிமலை என அறுதியிட்டு உறுதியாக நிறுவிவிட்டார்.

மௌன குருநாதனை சிவபெருமானுக்கே குருநாதனாகத் திகழ்கின்ற குமார குருநாதசுவாமியின் மலையே சுவாமிமலை. குருகிரி என்றும் அருணகிரிநாதர் இத்தலத்தைப் போற்றுவார்.

"வேதன் பொற்சிர மீதுகடாவி
நல்லீசன் சற்குரு வாய் அவர் காதினில்
மேவும் பற்றிலர் பேறுஅருள் ஓதிய முருகோனே."

என்று இத்தலச் சிறப்பினை அருணைவள்ளல் போற்றுகிறார். அறுபது ஆண்டுகளும் படிகளாய் விளங்க கட்டுமலைமீது விளங்குகிறார் ஞானசக்திதரன். அருணகிரிவள்ளல் திருஎழுகூற்றிருக்கை என்னும் சித்திரக்கவியால் போற்றிய பெருமை மிக்க தலம் இது. அவருக்கு திருவடி காட்டிய அருமையான தலம்.

## 5. குன்று தோருடல்

நக்கீரர் முருகவேளிடம் நம்மை ஆற்றுப்படுத்தும் குன்று தோருடல் என்பது குன்றுகள் தோறும் விளங்கும் கோலக் குமரன் தலங்களைக் குறிக்கும்.

குறிஞ்சிக் கிழவனாகிய முருகவேள் குன்றமெங்கும் கோயிலாக் கொண்டு திகழ்கின்றான்.

"வடிவதாம் மலையாவையும் மேவிய தம்பிரானே"
"பலகுன்றிலும் அமர்ந்த பெருமானே"
"பலமலை உடைய பெருமாளே"
"குன்றுதோருடல் மேவும் பெருமானே"

என்று அருணகிரிநாதர் பலவாறு போற்றுகிறார்.

குன்றுதோருடல் என்றவுடன் திருத்தணிகை முதன்மையாக வைத்துப் போற்றப்படுகிறது. "வரை இடங்களில் சிறந்தது தணிகை மால்வரையே—" கந்தபுராணம். முருகனின் செருத்தணிந்த இடமே திருத்தணிகை. வள்ளிமலையில் வேடமங்கையாகிய வள்ளியை ஆட்கொண்டு திருத்தணிகையில் மணாங்



கொண்டு வள்ளி சன்மார்க்க வித்தகனுக விளங்குகிறுன் வெற்றிவேற் பெருமான். எல்லா மலைகளிலும் அமர்ந்த முருகன் திருக்கோயில்கள் அனைத்தும் குன்று தோறுடல் என்ற வகையில் அமையும்.

## 6. பழமுதிர்சோலை

"பழமுதிர்சோலை மலை கிழவோனே" என்று திருமுருகாற்றுப்படையை முடித்துப் போகிறுர் நக்கீரனுர். இதுவே சோலைமலை என அருணகிரி நாதரால் விதந்து போற்றப்படும்.

கூடற்கே வைகை யிற்கரை கட்டிய
ஆள்ஒப் பாய்உதிர் பிட்டமு துக்குஅடி படுவானேடு
ஆரத்தோடு அகில் உற்ற தருக்குல
மேகத்தோடு ஒருமித்து நெருக்கிய
ஆதிச்சோலை மலைப்பதி

என்று மதுரையின் அருகில் விளங்கும் சோலைமலையை வரலாற்றுப் பின்னணியோடு பாடுவார் அருணை வள்ளல். நூபுரகங்கைபாயும் மாமலை இது. மலைமீது



முருகன் கோயிலும், மலையின் அடிவாரத்தில் அழகர் கோயில் என்னும் திருமால் திருப்பதியும் உள்ளன.

"சோலைமலை மேவிநின்ற பெருமாளே
ஞான நடமே புரிந்து வருவாயே" —திருப்புகழ்

தமிழக வரலாற்றில் முருகனுக்குரிய தொன்மைக் கோயில்களுள் இரண்டினைக் குறிப்பிடுதல் வேண்டும்.

ஒன்று : இலாடன் கோயில். இது மதுரையி லிருந்து மேலூர் செல்லும் வழியில் உள்ள ஒத்தக்கடை என்ற சிற்றூரில் உள்ளது. இங்குள்ள இரு குடைவரைக் கோயில்களில் ஒன்று நரசிம்மருக்கும் மற்றொன்று முருகனுக்கும் உரியன.

மேற்கு நோக்கிய மலைச்சரிவில் முருகனுக்குரிய குடைவரைக் கோயில் உள்ளது. பல்லவர் கலைப் பாணியின் முதற்கட்டமாகத் திகழும் குடைவரைக் கோயிலுக்குச் சிறந்த எடுத்துக்காட்டு இது. ஆயினும் இக்கோயிலைப் பாண்டிய மன்னன் அமைத்தனன் என்பர் அறிஞர். இக் குடைவரைக் கோயிலில் கருவறை யும் அர்த்தமண்டபமும் உள்ளன. கருவறையின் பின் சுவரில் அறுவர் பயந்த செல்வன் தனது துணைவி

யுடன் பொலிவுடன் அமர்ந்திருக்கும் நிலை பல்லவர் கலை மாண்பிற்குச் சான்ருகும். கருவறையின் தென் புறம் முருகனின் கொடியாகிய சேவலும் வடபுறம் ஊர்தியாகிய மயிலும் காணப்படுகின்றன. அர்த்த மண்டபத்தின் தென்புறத்தில் மண்டியிட்டு அமர்ந் துள்ள மனித உருவம் இக்குடைவரையை அமைத்த பாண்டியனுக இருக்கலாம் என அறிஞர் கருது கின்றனர். இங்குள்ள கல்வெட்டுகளில் 8-ஆம் நூற்ருண்டைச் சார்ந்த வட்டெழுத்துக்கள் உள்ளன.

இரண்டாவது, கண்ணனூர் பாலசுப்பிரமணியர் கோயில். தஞ்சையை ஆண்ட விசயாலய சோழனின் மகன் முதலாம் ஆதித்த சோழன் காலத்தைச் சார்ந்த இக்கோயில் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ளது. சுயம்பிரதான வகையைச் சார்ந்த கற்கோயில் இது. இங்குள்ள விமானம் வட்ட வடிவமாகவும் அதன் சிகரம் மணியைப் போன்றும் உள்ளன. கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் முருகவேளின் வாகனமான 'பிணிமுகம்' என்னும் யானை காணப்படும். இவ்வாறு யானைகளைக் கொண்ட கிரீவம் அமைந்துள்ளது இக் கோயிலின் தனிச்சிறப்பாகும். கோயில் பழமையானது. இங்குள்ள பாலசுப்பிரமணியர் திருவுருவம் பிற்காலத் தைச் சார்ந்ததாகும். நான்கு கரங்களைக் கொண்டு அக்கமாலை, சக்தியுடன் இருகரங்கள் அபயவரத மாகத் திகழ முருகவேள் விளங்குகிருர்.

முருகனது அழகுமிகும் ஆலயங்கள் பல உள. "அருணகிரிநாதர் அடிச்சுவட்டில் திருப்புகழ்த் தலப் பயணம்—" என்ற நூல் சுவாமிமலை ஸ்ரீ சுவாமிநாத சுவாமி திருக்கோயிலில் வெளிவந்துள்ளது. அதனைப் படித்து அத்தலங்களுக்குச் சென்று வழிபட்டு இன்புறலாம்.

# 6. நமது பணி

தமிழகத்தின் பண்பாடு திருக்கோயில்களாலேயே பொலிவுற்ற மாண்புடையது. கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்று ஆணையிட்டனர் நம் முன்னோர். கோயில் விளங்கக் குடிவிளங்கும் என அனுபவஞானம் பேசிற்று.

"முன்னவனார் கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள, வாரி வளங்குன்றும்
கன்னங் களவு மிகுந்திடும், காசினி
என்னரு நந்தி எடுத்துரைத் தானே."

—(திருமந்திரம் 518)

என்று திருமூல நாயனார் எச்சரிக்கின்றார். இன்று நமது சமுதாயத்தில் விளங்கும் மூன்று பெரும் பிரச்சினைகள் இப்பாடலில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. நமது அரசியலும், நாட்டு வளமும், சமுதாய ஒழுக்கமும் நமது ஆன்மீகப் பண்பைப் பொறுத்தே அமைகின்றன. மனம் பண்பட்டால் வாழ்வு பண்படும். ஆனால் நம் மனம் அழுக்காறு அவா வெகுளி இன்னாச் சொல் போன்ற பல அழுக்குகளால் புண்பட்டுள்ளது. இந்த மனப்புண்ணை ஆற்றும் மாமருந்து இறை வழிபாடு ஒன்றேயாகும்.

முறையான கடவுள் வழிபாடு அமைந்துவிட்டால் வாழ்வில் குறையேதும் வாராது. முழுஞானப் பரம்பொருளாகிய முருகவேளை நாள்தோறும் வழிபடுவோர் வாழ்வில் எல்லா நலன்களையும் பெற்று மகிழ்ந்து வாழ்கிறார்கள்.

கண்ணேறு வாராது, பிணியொன்று சேராது,
கவலைப்படாது, நெஞ்சம்
கலியாது, சலியாது, நலியாது, மெலியாது
கலியென்ற பேயடாது,
விண்ணேறும் அணுகாது, கன்மவினை தொடராது,
விஷமச்சுரம் வராது
வெய்யபூதம் பில்லி வஞ்சனை தொடரா,
விடம்பரவு செந்தும் அடரா,

எண்ணேறு சனனங்கள் கிடையாது, காலபயம்
என்னளவுமே இராது, இவ்
ஏழைக்கிரங்கியருள் தெய்வம் உன்னையல்லாமல்
இன்னுமொரு தெய்வம் உள்தோ?
தண்ணேறு கங்கைமலை மங்கையருள் தங்கமே
சரசகோபாலன் மருகா
சதுர்மறைகளே தந்த பரமகுருவாய் வந்த
சரவண பவானந்தனே!

என்று தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் தனது சுப்பிரமணியர் திருவிருத்தப்பதிகத்தில் தலைக்கட்டு கிறார்.

நாயன்மார்களும், ஆழ்வார்களும் ஞானிகளும், தபோதனர்களும், அருளாளர்களும் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் இறை நெறியை விளக்கி வழிபட்டு, வாழ்ந்து காட்டியதோடு நாம் வழிபட்டுய்ய பல திருக்கோயில்களையும் நிறுவிச் சென்றுள்ளனர். ஒவ்வொரு தலமும் ஒவ்வொரு வகையில் சிறப்புடையதாய், உலகெங்கும் இறைவன் சிறப்பு வெளிப்படும் மாபெரும் உண்மையை விளக்கி நிற்கின்ற மாண்பினைக் காண்கிறோம்.

முருகவேளை அதிகமான கோயில்களில் சென்று வழிபட்டுப் பரவிய செந்தமிழ் சந்தக்கடலாகிய கருணை

மிகும் அருணகிரிநாத சுவாமிகள் பாடிய திருப்புகழ்ப் பாடல்கள் 16,000 ஆகும். அவற்றுள் 1330 பாடல்களே நமக்குக் கிடைத்துள்ளன. அவற்றின் மூலம் 216 திருத்தலங்களை நமக்கு ஆற்றுப்படுத்துகிறார். 1330 பாடல்கள் மூலம் 216 தலங்களைக் காணலாம் எனில் 16000 பாடல்களும் கிடைத்திருப்பின் எத்தனை தலங்களைப் பெற்றிருக்கலாம் என்பதை எண்ணும்போது வியப்பு மிகுகின்றது. நம் தவக்குறைவால் நாம் எண்ணிறந்த அருளாளர்களின் அரிய ஞானச் செந்தமிழ்ப் பனுவல்களையும் இழந்துவிட்டோம். கிடைத்தவற்றையாவது பேணிக்காக்கிறோமா என்பதும் கவலைக்குரிய செய்தியாகும். ஓரளவுக்குக் கிடைத்த குறிப்புகளைக் கொண்டு அருணகிரிநாதர் வழிபட்ட தலங்களைத் தொகுத்து "அருணகிரிநாதர் அடிச்சுவட்டில்" என்ற நூலாக்கி முருகவேள் திருவருளால் சுவாமி மலை திருக்கோயில் வெளியீடாக அப்பொழுது அறநிலையத்துறை ஆணையராயிருந்த திருமிகு யு. சுப்பிரமணியன் I.A.S., அவர்களின் பேராதரவுடன் 1981-ஆம் ஆண்டில் வெளியிட்டுத் தமிழ் மக்களுக்கு மலிவு விலையில் வழங்கிடும் பேறு இந்நூலாசிரியர்களுக்குக் கிடைத்தது.

முருகவேளின் மலைக் கோயில்கள் அனைத்தையும் தொகுத்து வெளியிட முயற்சிகள் மேற்கொண்டு பணி நடைபெற்று வருகின்றது.

நமது பணிகள் யாவை என்பது குறித்துத் தமிழ்த் தெய்வமான முருகவேள் அடியார் ஒவ்வொருவரும் சிந்தித்துச் செயல்பட வேண்டிய தருணம் இது. நமது பணிகளைப் பட்டியலிட்டால் ஓரளவுக்கு அதன் பேரளவு புலப்படும்.

1. குடும்பத்தில் முறையான இறைவழிபாடு.

2. முருகவேள் அருட்பனுவல்களில் சிலவற்றை யாவது மனப்பாடம் செய்து நாளும் பாராயணமாகச் செய்தல்.

3. முருகவேள் திருக்கோயிலுக்கு தினமும் சென்று வழிபடல்.

4. தத்தம் ஊரிலுள்ள முருகன் கோயிலைத் தூய்மையாக வைத்துக்கொள்ள தன்னுலியன்ற பணிகளைச் செய்தல்.

5. தத்தம் ஊரிலுள்ள முருகன் கோயிலைத் திருப்பணி செய்ய முயற்சிகள் மேற்கொள்ளல் அல்லது மேற்கொள்ளும் அன்பர்களுடன் இயன்ற அளவு ஒத்துழைத்தல்.

6. தத்தம் ஊரிலுள்ள முருகன் கோயில்களில் முருகன் அருட்பனுவல்களைக் கல்வெட்டில் பதித்தல் அல்லது சுவர்களில் அழகாக எழுதி அமைத்து வைத்தல்.

7. தத்தம் ஊரிலும் முருக வழிபாட்டு மன்றங்கள் நிறுவி வாரவழிபாடு, மாதந்தோறும் சமய சொற்பொழிவு முதலியவற்றை முறையாகச் செய்து வருதல்.

8. தத்தம் ஊரிலும், கிடைக்கும் முருகன் பனுவல்களை அச்சிட்டு வழங்குதல்.

9. தத்தம் ஊரிலுள்ள பள்ளிச் சிறுர்களுக்கு முருகன் பனுவல்களைப் பயிலச் செய்து, ஒப்புவித்தல் போன்ற போட்டிகள் நடத்திப் பரிசுகள் வழங்கி உற்சாகப்படுத்துதல்.

10. முருகன் திருத்தல யாத்திரையை இயன்ற அளவு குழுக்களாகக் கூட்டு முயற்சியால் ஏற்பாடு செய்து வழிபடல்.

11. ஒவ்வொருவரும் தத்தம் வீடுகளில் நிகழும் சமயச் சடங்குகளின்போது ஒரு சிறு தோத்திர வெளியீடாவது அச்சிட்டு வழங்குதல்.

12. ஒவ்வொருவரும் தத்தம் வீடுகளில் நிகழும் திருமணம் போன்ற பெரும் விழாக்களில் ஆகும் செலவில் குறைந்தது ஒரு சதவீதமாவது அவ்வூர்க் கோயில் திருப்பணிக்கு வழங்குதல்.

13. ஒவ்வொருவரும் மாதம் ஒரு முறையாவது தத்தம் ஊரிலுள்ள கோயிலில் ஒன்றுகக் கூடி திருக் கோயில் மேம்பாடு, பாதுகாப்பு குறித்துத் தத்தம் ஆலோசனைகளைக் கூறுதல்.

14. தத்தம் ஊரிலுள்ள கோயில்களைக் கவனிக் காது வெளியூர்க் கோயில்களுக்குச் சென்று வழி படுவதால் பயனேதும் கிட்டாது என்பதை ஒவ்வொரு வரும் உணருமாறு செய்தல்.

15. கோயில்களே நமது வாழ்வின் மையம் என்பதை உணர்ந்து அவற்றின் பராமரிப்புப் பற்றிய உணர்வினை மக்களிடையே ஏற்படுத்துதல்.

என இவ்வாறு நமது பணிகள் குறித்து சிந்தித்தால் பட்டியல் நீண்டு கொண்டே செல்லும். நமது ஆரவாரமான வாழ்க்கையில் அமைதியும் பண்பும் வளர்ந்தால்தான் வாழ்வு பயனுள்ளதாக அமையும். திருக்கோயில்களில் திருவ் என்ற பெயரில் நாம் செய்துவரும் பயனற்ற செலவுகளாகிய பலவற்றையும் சமய உணர்வுடன் குறைத்து எது தேவையோ, எது நமது ஆன்மீக வளத்தினைப் பெருக்குமோ அதற்கு முதலிடம் அளித்து நமது சமூக மேம்பாட்டிற்கு வழிகாட்டும் வகையில் விழாக்களை அமைத்துக்கொள்ள நாம் முன் வரவேண்டிய தருணம் இது. பிற சமயத்தவரிடம் உள்ள சமயக் கட்டுப்பாட்டைப் பாராட்டக் கற்றுக்கொண்டுள்ள நாம், நமது சமய உணர்வினை என்று வளர்த்துக் கொள்ளப் போகிறோம் என்று நினைக்கும்போது கவலை தருகிறது. நமது சமயத்தலைவர்களும் இப்பணியில் சற்று தீவிரமாகப் பணியாற்ற வேண்டிய அவசியமும் இப்பொழுது உணரப்படுகிறது.

நமது சமூக கலாசாரப் பண்பாட்டுக் கேந்திரமாகத் திகழும் திருக்கோயில்களை நாம் ஒவ்வொருவரும் நம்மால் இயன்ற அளவு பாதுகாத்துப் பேணிக் காத்திட உதவ முன் வருவோமானால் நமது திருக்கோயில்கள் பொலிவுற்று வலுவுறும்.

பெரும் ஞானிகள் வாழ்ந்த நாட்டின் வாரிசுகளாகிய நாம், உலகிற்குச் செய்ய வேண்டிய பெரும்பணி— நமது கலாசாரக் கருவூலங்களாகிய நம் தொன்மைக் கோயில்களைப் பாதுகாத்து அடுத்த தலைமுறையினருக்குக் கொடுத்தாக வேண்டும் என்பதை நாம் ஒவ்வொருவரும் நாளும் சிந்தித்து செயல்படுவோமாக.

முருகா சரணம்.



உ

கமலமட மங்கைவத் னத்தழகு காண்பள் ; அக்
கரிய முகில் வண்ண னுஞ் செங்
கண்ணழகு காண்பன் ; வளர்கலைவாணி சொல்லழகு
காண்பள் ; முக்கண் தாதையும்
விமலமுறு சொற்பொருளின் அழகுகாண்பன் ; விதி
வியன் கரத் தழகு காண்பான் ;
வீறுதோள் அழகிந்தி ராணி காண்பாள் ; உம்பர்
வேந்து வேல் அழகு காண்பான் ;
நிமலமன அடியர்அடி அழகு காண்பார் ; கவுரி
நின்று பின் னழகு காண்பாள் ;
நின்னெத்த ஆதித்தன் வடிவழகு காண்பன் ; ஒரு
நீயும்அவ ருடன் குழுமியே
அமல மென் னகையழகு காணலாம், சமயமீ(து)
அம்புலி ஆட வாவே ;
அம்புய தடங்குலவு கம்பைவளர் கந்தனுடன்
அம்புலி ஆட வாவே.

—கம்பை முருகன் பிள்ளைத் தமிழ்.








'மகேச்வர வடிவங்கள்' என்ற இந்த நூல், அந்த வடிவங்களுடைய தியான ஸ்லோகங்கள், அதன் சரித்திரம், அந்த வடிவங்கள் உண்டாகிய காரணங்கள், அதன் தத்துவம், அந்த மூர்த்திகளுக்கு ஏற்பட்டிருக்கும் ஆயுதங்கள், அங்க லட்சணங்கள், இலக்கியச் சான்றுகள் ஆகிய யாவும் கொண்டதாய், மிகச் சிறப்பாக எளிய நடையிலே யாவரும் புரிந்து கொள்ளக் கூடிய முறையில் ஆக்கப் பெற்றுள்ளது.

இந்நூலாசிரியர்கள் மிக்க ஆராய்ச்சியுடனும் ஆர்வத்துடனும் பல புராதன ஆலயங்களிலிருந்து அந்தந்த வடிவங்களுக்கான திருவுருவங்களின் புகைப் படங்களையும் இணைத்து இந்த நூலைத் தயாரித்துள்ளார்கள்.........

இந்த நூல் ஒவ்வொருவருடைய கரத்திலும் திகழ வேண்டிய தொன்றாகும்.

—சிற்பகலாநிதி ஸ்ரீ S. M. கௌரிசங்கர் ஸ்தபதி

## இது எமது அடுத்த வெளியீடு

Jeevan Press, Madras-5.